# அருமையான பற்கள்!

## உங்கள் புன்னகையின் வசீகரத்தன்மை அபாயத்துக் குள்ளாகிறதா?

எல்லோரிடமிருந்தும் புகழைப்பெற உங்கள் குதூகல புன்னகை ஒருவித காந்த சக்தி. அதை ஈறு வியாதிகளால் பாழ்படுத்திக் கொள்ளாதீர்கள். தினந்தோறும் எஸ். ஆர். டூத்பேஸ்ட்*ஆல் பற்களை சுத்தம் செய்தால் அவை உறுதியான ஈறுகளில் பளிச்சென்று வெண்மையாக, உங்கள் புன்முறுவலின் நிகரற்ற செல்வமாய் விளங்கும்.

*பல் வைத்தியர்கள் ஈறு வியாதிகளுக்கு உபயோகபடுத்தும் சோடியம் ரிஸினோலியேட் சேர்ந்தது.




GSR. 27-50 TM

D. & W. GIBBS LIMITED, LONDON, ENGLAND




மலர் 5 இதழ் 47 | 1946 ஜூன் 30 | வியஒ ஆனி 16


| | | |
|---|---|---|
| என்ன சேதி? | ... | 5 |
| இடைக்கால சர்க்கார்-பாகப் பிரிவினை... | உம்மன் | 6 |
| உயிர் பிழைத்தது! அபாயம் நீங்கவில்லை! | ... | 9 |
| சிவகாமியின் சபதம் | கல்கி | 12 |
| காலக்ஷேபம் | ... | 23 |
| வட்டமேஜை | ... | 25 |
| காலேஜ் நெருக்கடியும்—அட்மிஷன் கஷ்டங்களும் | சாமா | 26 |
| பிறந்தநாள் பரிசு | கு. ரா. | 28 |
| வானசஞ்சாரம் | இசைத்தேனீ | 33 |
| கோதாவரிக் குண்டு | லல்லு | 34 |
| கம்பர் தரும் காட்சி | டி. கே. சி. | 38 |
| கந்தசாமிக்கு ஜே! | விதூஷகன் | 41 |
| வீடு வேண்டுமா? | சாவி | 42 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

தமிழகத்தின் சரித்திரத்தை ஆதாரமாகக் கொண்ட "சிவகாமியின் சபதம்" என்னும் தொடர் கதை இந்த இதழில் முடிவாகிறது.

தமிழகத்தின் பழைய சரித்திரம் இன்னும் சரியான முறையில் ஆராய்ச்சி செய்யப்பட்டு விரிவாக எழுதப்படவில்லை. எனினும், காஞ்சி பல்லவ வம்சத்தைச் சேர்ந்த மகேந்திர வர்மனும் நரசிம்ம வர்மனும் வாழ்ந்த காலத்தைப் பற்றிப் பல விவரங்கள் தெரிய வந்திருக்கின்றன. தமிழகத்தின் சரித்திரத்தில் மேற்படி மன்னர்கள் வாழ்ந்த காலம் மகோந்நதமான காலம் என்றும், சிற்பம் நடனம் சித்திரம் ஆகிய கலைகள் செழித்து வளர்ந்த காலம் என்றும் ஐயமறத் தெரிய வந்திருக்கிறது.




அந்தக் காலத்துத் தமிழ் மக்கள் வாழ்க்கையை யொட்டி அமைக்கப் பட்ட கதை சிவகாமியின் சபதம். இந்தக் கதையின் முக்கிய பாத்திரங்களிலே மகேந்திர வர்மர், மாமல்ல நரசிம்மர், சேனாபதி பரஞ்சோதி (சிறுத் தொண்டர்), வாதாபி புலிகேசி, இலங்கை மானவன்மன், நெடுமாற பாண்டியன், மங்கையர்க்கரசி, திருநாவுக்கரசர் பெருமான் ஆகியவர்கள் சரித்திரப் புகழ் வாய்ந்தவர்கள். வாதாபி சக்கரவர்த்தி புலிகேசி மகேந்திர வர்மரின் காலத்தில் தென்னாட்டின் மீது படை யெடுத்து வந்து கொள்ளிடக் கரை வரையில் வந்ததும், நரசிம்ம பல்லவர் சேனாபதி பரஞ்சோதியுடன் வாதாபியின் மேல் படை யெடுத்துச் சென்று அந்நகரை அழித்ததும் சரித்திர சம்பவங்கள்.

* * *

கதையைத் தொடர்ந்து படித்து வந்த எண்ணற்ற நேயர்கள் எவ்வளவு கவனமாகவும் ஆர்வத்துடனும் படித்து வந்தார்கள் என்பது, அவ்வப்போது அவர்கள் எழுதி வந்த கடிதங்களிலிருந்து தெரிய வந்தது. ஒரு சிறிய அச்சுப் பிழையோ, அத்தியாய எண்ணிக்கைகளில் தவறுதலோ கவனக் குறைவினால் ஏற்பட்டிருந்தாலும், முன்னுக்குப் பின் முரண்படுவதாக ஏதேனும் ஒரு விஷயம் தோன்றினாலும், உடனே நூற்றுக் கணக்கான நேயர்களிடமிருந்து கடிதங்கள் வருவது வழக்கமாயிருந்தது.

இவ்வளவு ஆர்வத்துடன் "சிவகாமியின் சபத"த்தைப் படித்து வந்த நேயர்களுக்கு மனமார்ந்த நன்றி செலுத்துகிறோம். இந்தச் சரித்திரக் கதைக்கு அவ்வப்போது பொருத்தமான அழகிய சித்திரங்கள் போட்டுக் கொடுத்து உதவிய சித்திரக் கலைஞர்கள் "வர்மா"வுக்கும், "மணியம்"த்துக்கும் நமது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பொள்ளாச்சி முனிஸிபல்
ஹைஸ்கூல் கட்டிட நிதிக்காக



ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி
உதவும் சங்கீதக் கச்சேரி

★

பொள்ளாச்சி
நாராயணா டாக்கீஸில்

5-7-46 வெள்ளிக்கிழமை
மாலை 6-30 மணிக்கு

★

சங்கீத ரத்ன
டி. சௌடய்யா - பிடில்
கல்பாத்தி ராமநாதன் - மிருதங்கம்
கோயமுத்தூர் ராஜப்பையர் - கஞ்சிரா
ஆலங்குடி ராமச்சந்திரன் - கடம்

★

S. விஜயராகவன்
பிரெஸிடெண்டு
பொள்ளாச்சி முனிஸிபல் ஹைஸ்கூல்
கட்டிட நிதிக் கமிட்டி

பிரதி வருஷம்

முற்றுபெற்ற
புதிய பாலிஸிகள்

1945 5.50 கோடிகள்
1944 4.74 கோடிகள்
1943 2.85 கோடிகள்
1942 1.41 கோடிகள்

H.F.-TN

நாஷனல்
இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்
7, கவுன்ஸில் ஹவுஸ் ஸ்டிரீட், கல்கத்தா.

மதராஸ் பிராஞ்சு :
"நாஷனல் இன்ஷ்யூரன்ஸ் பில்டிங்"
362, சைனாபஜார் ரோடு
எஸ்பிளனேட்

●

சப் ஆபீஸ்கள் :
பெங்களூர் : : மதுரை




மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 47

# என்ன சேதி?

## அப்பா! தப்பினோம்!

இம்மாதம் 27-ல் ரயில் வேலை நிறுத்தம் இல்லையென்று கேட்டதும், "அப்பா! தப்பினோம்!" என்று நாற்பது கோடி மக்கள் பெருமூச்சு விட்டிருப்பார்கள். அதைவிடப் பெருமூச்சு இந்திய சர்க்கார் விட்டிருப்பார்கள். வேலை நிறுத்தம் ஏற்படாமற் செய்த பெருமைக்கு ரயில்வேத் தொழிலாளரின் தலைவர்களே முழுமையும் உரியவர்கள். அரசியல் போராட்டமாகட்டும், தொழிலாளர் போராட்டமாகட்டும், முடிவான வெற்றிக்கு ஒரு முக்கியமான விதி உண்டு. கோரிக்கையிலே பாதிக்குக் குறைவாய்க் கிடைத்தால் தள்ளிவிட வேண்டும்; பாதிக்கு அதிகமாகக் கிடைப்பதானால் அதைத் தள்ளி விடாமல் பெற்றுக் கொண்டு பிற்பாடு சமயம் பார்த்துப் போராட வேண்டும். ரயில்வேத் தொழிலாளர் கோரிக்கைகளில் பாதிக்கு மேலே படிப் படியாக ரயில்வே போர்டார் கொடுக்க ஒப்புக் கொண்டு விட்டார்கள். ரயில்வேத் தொழிலாளர் பிடிவாதமாகத் தங்கள் கோரிக்கைகளைக் கடைசி வரையில் வற்புறுத்திக் கிளர்ச்சி செய்து வந்தது மிகவும் புத்திசாலித்தனம். அதனாலேதான் அவர்களுடைய கோரிக்கையில் ரூபாய்க்குப் பத்தணா விதம் பெற முடிந்தது. அவ்வளவு தூரம் ரயில்வே போர்டு இறங்கி வந்த பிறகு, அரசியல் நிலைமையையும் பஞ்சத்தையும் காரணமாகச் சொல்லி வேலை நிறுத்தத்தைக் கை விட்டது அசாத்தியமான புத்திசாலித்தனம். இவ்வாறு, தொழிலாளர்களின் நலன்களையும் பொது ஜனங்கள்—தேசத் தலைவர்களின் அநுதாபத்தையும் ஒருங்கே பாதுகாத்துக் கொண்ட ரயில்வேத் தொழிலாளர் தலைவர்களைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

## காட்டு மிராண்டிகள்

ஏறக்குறைய நாற்பது வருஷங்களுக்கு முன்னால் தென்னாப்பிரிக்காவிலே ஒரு புனிதமான போராட்டம் நடைபெற்றது. காந்திஜி அஹிம்ஸா ஆயுதத்தைக் கையிலேந்தி, சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்தி, தென்னாப்பிரிக்க இந்தியர்களின் மானத்தைக் காத்தார். இன்று அதே நிலைமையில் அதே விதமான போராட்டம் மீண்டும் ஆரம்பமாகியிருக்கிறது.

இந்தியர்களைத் தீண்டத் தகாதவர்களிலும் கேவலமான பார்க்கத் தகாதவர்களாக ஒதுக்கி வைக்கும் நிலக் கட்டுப்பாடு மசோதாவைக் கைவிடத் தென்னாப்பிரிக்க சர்க்கார் முன்வரவில்லை.

யார் என்ன சொல்லியும் ஸ்மட்ஸ் சர்க்காரின் காதிலே ஏறவில்லை.

இந்திய சர்க்கார் வர்த்தக ஒப்பந்தத்தை ரத்து செய்தனர். தென்னாப்பிரிக்காவிலிருந்து ஹைகமிஷனரை வாபஸ் பெற்றனர். அப்போதும் தென்னாப்பிரிக்க சர்க்காரின் பிடிவாதம் குறையவில்லை.

வேறு வழி ஒன்றும் இல்லாமற் போகவே, கடைசியில் தென்னாப்பிரிக்க இந்தியர்கள் தங்கள் சுய மதிப்பையும் மானத்தையும் காத்துக் கொள்வதற்காக அந்தப் பழைய அஹிம்ஸா ஆயுதத்தைக் கையிலேந்தி மீண்டும் சத்தியாக்கிரகப் போரிலே இறங்கினார்கள்.

ஜூன் 13-ம் தேதியன்று இரவு டர்பன் நகரிலே இந்தியர்கள் குடியேறக் கூடாதென்று தடை விதிக்கப்பட்டிருக்கும் பகுதியிலே கூடாரமடித்துக் கொண்டு உட்கார்ந்தார்கள்.

அதிலிருந்து இந்தியர்களின் சத்தியாக்கிரகம் நடந்து வருகிறது. இதுவரை, ஓர் ஐரோப்பியப் பாதிரியார் உட்பட 99 பேர்

கைதி செய்யப்பட்டிருப்பதாகச் செய்தி வந்திருக்கிறது. சில வெள்ளைக்காரர்கள் இந்திய சத்தியாக்கிரஹிகளின் கூடாரங்களைக் கொளுத்தல் முதலிய திருப்பணிகளையும் செய்திருக்கிறார்கள்.

ஆப்பிரிக்காவிலே முன்னொரு காலத்தில் மனிதரை மனிதர் கொன்று தின்னும் அநாகரிகக் காட்டு மிராண்டி ஜாதியார் இருந்ததாகப் படித்திருக்கிறோம்.

அவர்களைவிடக் காட்டுமிராண்டித்தனமாகத் தென்னாப்பிரிக்க சர்க்காரும் வெள்ளைக்காரரும் நடந்து கொள்கின்றனர்.

இப்படிப்பட்ட தென்னாப்பிரிக்க அரசாங்கமும் ஐக்கிய தேசங்களின் மகாசபையில் அங்கம் வகிக்கிறது.

மேற்படி ஐக்கிய தேச சபை ஒன்று தென்னாப்பிரிக்க சர்க்காரை நாகரிகப் படுத்தட்டும்; அல்லது தூக்குப் போட்டுக் கொண்டாவது சாகட்டும்!

## புரியாத விஷயம்

தென்னாப்பிரிக்க வெள்ளையர்கள் கறுப்பர்களாகிய இந்தியர்களுக்குச் செய்து வரும் அநீதியை ஒருவாறு புரிந்து கொள்ள நம்மால் முடிகிறது.

ஆனால், நம்மருகே இருந்து நம்முடைய உதவியைப் பலவிதங்களிலும் எதிர்பார்த்து வாழும் ஒரு நாடு நம்முடைய மக்கள்மேல் வைஷம்யம் பூண்டு கொடிய விரோதிகளைப் போல நடத்துவது நமக்கு எப்படி இலகுவில் புரியும்?

இந்த மாத ஆரம்பத்திலே, இலங்கைத் தோட்டங்களில் வேலை செய்யும் இந்திய மக்களில் ஏறக்குறைய ஒன்றே கால் லட்சம் பேர் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்.

அவர்கள் சம்பள உயர்வு கோரி வேலை நிறுத்தம் செய்யவில்லை. போனஸ் வேண்டுமென்று வேலை நிறுத்தம் செய்யவில்லை.

நாவிஸ்பியர் என்ற தோட்டத்தில் தலைமுறை தத்துவமாக வாழ்ந்து வந்த 4000 இந்தியக் குடும்பங்களை இலங்கை சர்க்கார் பலவந்தமாக வெளியே போகச் சொன்னதை ஆட்சேபித்தே வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்.

## பசுவைக் கொன்று தானமா?

மேற்படி நாலாயிரம் இந்தியக் குடும்பங்களை வெளியே போகச் சொல்வதற்கு இலங்கை சர்க்கார் ஒரு பேஷான காரணத்தைச் சொல்லியிருக்கிறார்கள்.

அதாவது, இதன் மூலம் நிலம் இல்லாத சிங்கள மக்களுக்கு நிலத்தைக் கொடுத்து உதவ முயற்சிக்கிறார்களாம்.

இலங்கை சர்க்கார் சொந்த மக்களுக்கு நன்மை செய்வதில் யாரும் குறுக்கே நிற்க விரும்பவில்லை. ஆனால், பசுவைக் கொன்று ஏன் செருப்பு தானம் பண்ணவேண்டும்?

நிலம் இல்லாத மக்களுக்கு நிலம் கொடுக்க வேண்டுமானால், அதற்காக ஏழை இந்திய மக்களின் தலையிலே ஏன் கை வைக்க வேண்டும்?

இலங்கையிலே மூன்றில் இரண்டு பகுதி நிலம் யாரும் கவனிப்பாரற்று வெறுமே கிடக்கிறதே, அது சிங்கள மந்திரிகளின் கண்ணிலே படவில்லையா?

இந்த அநியாயத்தை இந்தியா வெறுமே பார்த்துக் கொண்டிராது என்பதை இலங்கை சர்க்கார் உணர வேண்டும்.

## 45 லட்சம் கெஜம்

சென்னையிலுள்ள பக்கிங்காம்-கர்னாடிக் ஆலை, உலகத்திலேயே இரண்டாவது பெரிய ஆலை; இந்தியாவுக்குள்ளே மிகப் பெரிய ஆலை. இதில் மூன்று ஷிப்ட் வேலை செய்யும் 15,000 தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்து 18 நாள் ஆனபிறகு காங்கிரஸ் சர்க்கார் ஒரு சமரச அதிகாரியை நியமித்திருக்கிறார்கள்! இந்தப் பதினெட்டு நாளில் தினம் ஒன்றுக்கு 2½ லட்சம் கெஜம் துணி வீதம் மொத்தம் 45 லட்சம் கெஜம் துணி உற்பத்தி நஷ்டமாகியிருக்கிறது. "நூலோ நூல்" என்று கைத்தறிகாரர்கள் பறந்து கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் நூல் உற்பத்தி பெருவாரியாகத் தடைப்பட்டிருக்கிறது. மேற்படி ஆலையின் ஐரோப்பிய முதலாளியையும் தொழிலாளர் தலைவரையும் முதல் நாளே அழைத்துச் "சமரசமாகப் போங்கள்" என்று மந்திரிகள் சொல்லியிருந்தால் அநேகமாகத் தீர்ந்து போயிருக்கும். அல்லது தொழிலாளிகளைப் பார்த்து, "நாங்கள் விசாரித்து நியாயம் செய்கிறோம்; நீங்கள் வேலைக்குப் போங்கள்!" என்று சொல்லியிருந்தாலும் தொழிலாளிகள் கட்டாயம் வேலைக்குப் போயிருப்பார்கள். இப்படி ஒன்றும் செய்யாமல், "தலையிட மாட்டோம்" என்று பதினெட்டு நாள் சொல்லிக் கொண்டிருந்து விட்டு, கடைசியில் தலையிடத் தீர்மானித்துச் சமரச அதிகாரியை நியமித்திருக்கிறார்கள். நியமிக்கிற சமரச அதிகாரியை ஆரம்பத்திலேயே நியமித்திருக்கக் கூடாதா? இதற்குப் பதினெட்டு நாள் யோசனை செய்ய வேண்டுமா? மேலும் காலம் கடத்தாமல் சமரச அதிகாரி சீக்கிரம் சமரசம் செய்து வைப்பார் என்று நம்புகிறோம்.

---

சென்ற இதழின் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: என். தெஹன்தி, ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்.

# இடைக்கால சர்க்கார்-பாகப் பிரிவினை



-உம்மன்


ஆட்சேபனையாவது, ஒன்றாவது? அதெல்லாம் இங்கே பலிக்காது!
ஆட்சேப- னைகள்


இவர்களைக் கண்ணைக் கட்டி எங்கே அழைத்துக் கொண்டு போகிறார் இவர்?


இதைத் தூக்க முடியுமா, இந்த ஒண்டி ஆளினால்?
இடைக்கால சர்க்கார்.

# உயிர் பிழைத்தது! அபாயம் நீங்கவில்லை!

பிரபல ஜோதிடர்கள் கையை அகலமாய் விரித்து விட்டார்கள்! பிரசித்தி பெற்ற வைத்தியர்கள் இனிமேல் நம்புதற்கில்லை என்று சொல்லி விட்டார்கள்! அந்திமக் கிரியைகளுக்குப் புரோகிதர்கள் தர்ப்பைக் கட்டு சகிதமாக வந்து விட்டார்கள்! தகன சமஸ்காரத்துக்குரிய ஏற்பாடுகள் துரிதமாக நடைபெற்றன! வயது முதிர்ந்த மூதாட்டிகள் அவசர அவசரமாக ஒப்பாரிப் பாட்டுக்களை ஞாபகப்படுத்திக் கொண்டார்கள்! பத்திரிகைக்காரர்களும் சரம சுலோகக் கட்டுரைகள் எழுதித் தயாராக வைத்துக் கொண்டார்கள்!

இவ்வளவு நெருக்கடியையும் தாண்டி அந்த மூன்று மந்திரிகளின் திட்டம் தாற்காலிகமாகத் தப்பிப் பிழைத்தது!

மேற் கொண்டு அதன் தலைவிதி எப்படியிருக்கிறதோ, தெரியவில்லை! அல்லோபதி என்கிற இங்கிலீஷ் வைத்தியம், ஹோமியோபதி என்கிற அணுகுண்டு வைத்தியம், ஆயுர்வேதம் என்கிற சுதேச வைத்தியம், யூனானி என்கிற பாகிஸ்தான் வைத்தியம், சித்த வைத்தியம் என்கிற சுத்தத் தமிழ் வைத்தியம், சீகிய பாந்த் வைத்தியம் என்கிற இமாலய வைத்தியம், காஷ்மீர் பண்டித வைத்தியம் என்கிற இருதயஸ்தான் வைத்தியம், எல்லா வற்றிற்கும் மேலாக இயற்கை வைத்தியம் என்கிற மகாத்மா வைத்தியம் இவ்வளவு வகை வைத்தியங்களையும் தாண்டி அந்தத் திட்டமானது இனிமேலும் உயிர் தப்பிப் பிழைக்க வேண்டும்!

ரொம்ப ரொம்பக் கஷ்டமான காரியந்தான். ஏதோ கடவுளின் அருள் பலம் இருந்தால்தான் நடக்கக் கூடியது.

* * *

மூன்று மாதத்துக்கு முன்னால், ஏப்ரல் மாதம் 25உ யன்று, சுப யோக சுபகரண சர்வ குழப்ப சுப லக்னத்தில், பிரிட்டிஷ் மந்திரிகள் மூன்று பேர் பிரிட்டிஷ் தொழிற்கட்சி சர்க்காரின் சார்பாக இந்தியாவிலே வந்து இறங்கினார்கள். இந்தியாவிலே சுதந்திர ஸ்தாபனம் செய்து விட்டு, அல்லது சுதந்திர ஸ்தாபனத்துக்குப் பலமான திடமான நிரந்தர அஸ்திவாரமாவது போட்டு விட்டுத்தான் இங்கிருந்து திரும்புகிறது என்ற திடசங்கல்பத்துடன் வந்திருப்பதாகச் சொன்னார்கள்.

மூன்று பிரிட்டிஷ் மந்திரிமார்களில் நமது பழைய சிநேகிதர் ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸும் ஒருவர். இந்த மனிதர் இந்தியாவுக்கு வந்த பிறகு நாட்கள் வாரங்களாகவும், வாரங்கள் மாதங்களாகவும் ஆகிக் கொண்டிருப்பதைச் சீமையிலிருந்த இவருடைய வாழ்க்கைத் துணைவி கவனித்தார். "இதில் ஏதோ விஷயம் இருக்கிறது!" என்று சந்தேகித்தார். புருஷனைத் தேடிக் கொண்டு இந்தியாவுக்குப் பறந்து வந்து சேர்ந்தார். வந்த பிறகு, "விஷயம் வேறே ஒன்றும் இல்லை; வந்த காரியம் முடியாததுதான்" என்பதைத் தெரிந்துகொண்டு ஆறுதல் அடைந்தார். இதற்குள்ளே சீமையிலேயிருந்து "மகளுக்கு உடம்பு சரிப்படவில்லை" என்று செய்தி வந்தது. எனவே, லேடி கிரிப்ஸ் புருஷனை இங்கேயே விட்டு விட்டுத் திரும்பிப் போக வேண்டுமே என்று யோசித்துக் கொண்டிருந்த போது, நல்ல வேளையாகத் தூது கோஷ்டியின் வேலையும் முடிந்தது!

விஷயம் எவ்வளவு நீடித்து நடந்திருக்கிறது என்பதை மேற்படி சம்பவத்திலிருந்து நேயர்கள் நன்றாய்த் தெரிந்து கொள்ளலாம்.

* * *

ஆனால், பாவம், மூன்று பிரிட்டிஷ் மந்திரிகளும் மூன்றுமாத காலமாக இங்கே வெறுமனே தூங்கிக் கொண்டு இருந்து விடவில்லை.

வந்ததும் வராததுமாகப் பேச்சு வார்த்தை தொடங்கினார்கள். "பேசப் போகிறாயோ? சாகப் போகிறாயோ?" என்ற பழமொழியை நன்றாய் மனதில் வாங்கிக்கொண்டு மூச்சு விடாமல் பேசினார்கள். முதலில் அவர்களுடைய பேச்சுக்களைப் பற்றி "இத்தனை நிமிஷம் இத்தனை விநாடி" என்று செய்தி வந்தது. பிற்பாடு "இத்தனை மணி இத்தனை நிமிஷம்" என்று செய்தி வந்தது. கடைசியாக, நாள் கணக்கிலேயே பேச்சுக்கள் நடக்க ஆரம்பித்தன.

காங்கிரஸ் — முஸ்லிம் லீக் — சமஸ்தானங்கள் ஆகிய மூன்று பெரிய கோஷ்டிகளும் சேர்ந்து சமரசமாக ஒரு சுதந்திர அரசியல் அமைப்பைத் தயாரித்துக் கொள்வதற்கு ஆரம்பத்தில் அவர்கள் பிரயத்தனம் செய்தார்கள்.

ஒரு மாதத்துக்கு மேல் பிரயத்தனம் செய்தும் அது பலிக்கவில்லை.

எனவே, சிம்லா மலை உச்சியில் போய்ச் சிரம பரிகாரம் செய்துகொண்டு தாங்களே ஒரு மத்தியஸ்த அரசியல் திட்டத்தை வெளியிட்டார்கள்.

மேற்படி திட்டத்தைத்தான் நாம் "இந்தியாவின் சுதந்திர சாஸனம்" என்று தலைப்புக் கொடுத்துப் பாராட்டி எழுதியிருந்தோம். அந்த பிரிட்டிஷ் மத்தியஸ்தத் திட்டமானது நமது காங்கிரஸ் தலைவர்களின் பொறுமைக்கும் சோர்வில்லா முயற்சிக்கும் இராஜ தந்திரத்துக்கும் மிகச் சிறந்த வெற்றியாகும் என்று வாழ்த்துக் கூறியிருந்தோம்.

ஆனால் அப்படிப்பட்ட திட்டத்தைக் கை நழுவ விட்டு விடுவார்களோ, பழைய பல திட்டங்களைப்போல் இதுவும் 'ஹோ கயா' ஆகிவிடுமோ என்ற பயம் ஏற்பட்டது.

"அவ்வளவு நல்ல திட்டத்தை உண்மையாகவே பிரிட்டிஷார் தந்து விடுவார்களோ? இதில் ஏதோ மாய மந்திரம் இருக்கக் கூடும்!" என்ற சந்தேகம் சிலருக்குத் தோன்றியது. திட்டத்தில் ஏதாவது ஓட்டை, பொத்தல் இருக்கிறதா என்று கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தார்கள்.

வேறு சிலர், "பிரிட்டிஷாரின் மத்தியஸ்தத் திட்டம் வஞ்சக மோசடித் திட்டமாய்த்தானிருக்கும். அதைக் கண்ணெடுத்தும் பார்க்கக் கூடாது!" என்று ஓரே போடாய்ப் போட்டார்கள்.

மற்றக் காரியங்களில் முற்றும் மாறுபட்டிருக்கும் காங்கிரஸ் ஸோஷலிஸ்ட் கட்சியாரும், கம்யூனிஸ்ட் கட்சியாரும் இந்த விஷயத்தில் அருமையாக ஒன்றுபட்டு, ஐக்ய முன்னணியை ஏற்படுத்திக் கொண்டு, "பிரிட்டிஷ் திட்டத்தைத் தள்ளுங்கள் குப்பையிலே!" என்று ஆர்ப்பரித்தார்கள்.

காங்கிரஸ் காரியக் கமிட்டியார் ஒரு மாதத்துக்கு முன்னால் வெளியிட்ட சந்தேகக் குழப்பத் தீர்மானத்தைப் பார்த்த போது, மேற்படி ஸி. எஸ். பி — கம்யூனிஸ்ட்—ருஷியப்பிரசார அர்சு, வெற்றி பெறலாம் என்றே தோன்றியது.

தேசத்தின் அதிர்ஷ்டவசமாக அவ்விதம் நடைபெற்று விடவில்லை.

கடைசியாக, முடிவாக, சந்தேக விபரீதங்களுக்கு இடம் இல்லாமல், காங்கிரஸ் காரியக் கமிட்டியார் மூன்று மந்திரிகளின் அரசியல் திட்டத்தை ஒப்புக்கொண்டு விட்டார்கள்.

அரசியல் நிர்ணய சபைக்குப் பிரதிநிதிகளை அனுப்பி வைக்கத் தீர்மானித்து அதற்கு வேண்டிய ஆயத்தங்களையும் உடனே செய்யத் தொடங்கி விட்டார்கள்.

மௌலானா ஆஸாத் அவர்கள் தேசத்துக்கு விடுத்திருக்கும் அறிக்கையிலே, "காங்கிரஸ் கொள்கைகளுக் கிணங்கவே திட்டம் வகுக்கப் பட்டிருக்கிறது" என்றும், "காங்கிரஸின் இரண்டு முக்கிய இலட்சியங்களும் திட்டத்தில் நிறைவேறியிருக்கின்றன" என்றும் தெரியப் படுத்தியிருக்கிறார்.

அந்த மட்டுக்கும் கடவுள் ஒருவர் இருக்கிறார், அவரும் ஏதோ ஏழை இந்தியாவின் பங்கிலே இருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். அப்படி இருக்கிற ஆண்டவன் இன்னும் கொஞ்ச காலம் நீடித்து இந்தியாவின் பங்கிலேயே இருக்க வேண்டுமென்று ரொம்பவும் வேண்டிக் கொள்கிறோம்.

ஏனெனில், அரசியல் நிர்ணய சபை கூடிச் சுதந்திர அரசாங்கத் திட்டத்தைத் தயாரித்து அந்தகைய அரசாங்கம் இந்தியாவில் ஸ்தாபிதமாகும் வரையில் இன்னும் எத்தனையோ அபாயங்களையும் இடையூறுகளையும் முட்டுக் கட்டைகளையும் தாண்டியாக வேண்டும். அதற்கெல்லாம் ஆண்டவன் உதவி அவசியம் தேவை.

* * *

அரசியல் நிர்ணய சபையானது அமைதியான சூழ்நிலையில் கூடிச் சமரச பாவத்துடன் விஷயங்களை விவாதித்து இந்திய சுயராஜ்ய திட்டத்தை வகுக்க வேண்டுமானால், — அச் சமயம் புது டில்லியில் தேசியத் தலைவர்களைக் கொண்ட தேசிய சர்க்கார் நடைபெற வேண்டும் என்று நாம் வற்புறுத்திக் கூறியிருந்தோம். காங்கிரஸ் தலைவர்களும் அதை வெகு ஸ்பஷ்டமாகத் தெரிவித்திருக்கிறார்கள்.

உண்மையில், இந்த விஷயத்தின் முக்கியம் பிரிட்டிஷ் மந்திரிகளுக்கும் வைஸ்ராய்க்கும் நாம் சொல்லித் தெரிய வேண்டியதே யில்லை. அவர்களுக்கே நன்றாய்த் தெரிந்த விஷயந்தான்.

ஆகையினால்தான், நீண்ட கால அரசியல் திட்டத்தைப் பற்றி முடிவு ஏற்படுவதற்கு முன்னாலேயே இடைக்

கால கவர்ன்மெண்டைப்பற்றி அவர்கள் மற்ருெரு தீர்ப்பை வெளியிட்டார்கள்.

ஆனல், நீண்டகாலத் திட்டத்தைக் கூடிய வரையில் தர்ம நியாயமான முறையில் தயாரித்து விட்டதற்குப் பரிகாரமாகத்தானே, என்னமோ, இடைக்காலத் திட்டத்தில் ஒரு பெரிய அநீதியைச் செய்து விட்டார்கள்.

இயற்கைக்கு மாருன ஒரு விஷயத்தைத் தேசம் ஒப்புக்கொள்ள வேண்டும் என்ருர்கள். அதாவது, "எட்டும் இருபத்துநாலும் ஒன்றுதான்" என்று சொல்லி, அதை ஒப்புக் கொள்ளுங்கள் என்ருர்கள்.

எட்டுக் கோடி முஸ்லிம்களுக்கும் இருபத்துநாலு கோடி சாதி ஹிந்துக்களுக்கும் இடைக்கால 'தேசிய' சர்க்காரில் சமப் பிரதிநிதித்துவம் என்று சொன்னுர்கள்.

முதலில், வைஸராய் வெளியிட்ட அறிக்கையில், சாதி - சமூகப் பிரச்னைகளைக் கிளப்பாமல், "அந்தந்த மனிதர்களின் தராதரத்தை யொட்டிப் பொது ஜனங்கள் ஒப்புக் கொள்ளக் கூடிய தலைவர்களை அழைத்திருக்கிறேன்" என்று மட்டும் சொல்லி யிருந்தார்.

ஆனல், காயிதே ஆஜம் ஜின்னு விஷயத்தை அத்துடன் விடாமல் வைஸராயைக் கிளறிக் கேட்டார்.

அதற்கு வைஸராயும் மட்டைக்கு இரண்டு கீத்து என்று பதில் சொல்லித் தெளிய வைத்தார்.

முக்கியமாக, காங்கிரஸுக்குரிய ஸ்தானங்களில் தேசிய முஸ்லிமைச் சேர்ப்பதே யில்லை என்று ஜனுப் ஜின்னு கையடித்துச் சத்தியம் செய்து கொடுக்கச் சொன்னுர். இந்த அபத்தமான நிபந்தனையை வைஸராயும் ஒப்புக் கொண்டு விட்டதாகத் தெரிந்தது.

இந்த நிலைமையில் இடைக்கால சர்க்காரைப் பற்றிய தீர்ப்பைக் காங்கிரஸ் கமிட்டி நிராகரித்து விட்டது.

ரொம்ப சரியான காரியம்.

ஒரு குடம் பாலா யிருந்தாலும் ஒரு துளி விஷம் கலந்திருக்கும்போது அதை எப்படி ஒப்புக்கொள்ள முடியும்?

எனவே, இண்டரிம் கவர்ன்மெண்ட் திட்டத்தைக் காங்கிரஸ் அடியோடு நிராகரித்து விட்டது.

* * *

ஹிந்துக்களோடு முஸ்லிம்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் கொடுக்கலாம்; காங்கிரஸோடு முஸ்லிம் லீக்குக்கும் சமப் பிரதிநிதித்துவம் கொடுக்கலாம். ஒன்றிரண்டு ஸ்தானங்கள் அதிகமாகக்கூடக் கொடுக்கலாம்! எந்த நிலைமையில் கொடுக்கலாம் என்ருல், ஜனுப் ஜின்னு காங்கிரஸ் தலைவர்களோடு ஒத்துப் போய்ச் சமரசமாகத் தேச காரியங்களை நடத்துவதற்கு முன் வரும்போது கொடுக்கலாம். அதற்கு மாருகக் காங்கிரஸ் மாபெருந் தலைவர்களை ஜனுப் ஜின்னு உதாசீனம் செய்து, பிரிட்டிஷாரின் உதவி கொண்டு சமப் பிரதிநிதித்துவம் அடைய முயற்சி செய்யும்போது கட்டாயம் அதை எதிர்ப்பது காங்கிரஸின் கடமையாகும். தமக்கு இல்லாத பாத்தியதையை ஜனுப் ஜின்னு மிரட்டி வாங்கப் பார்க்கும் போது அதற்கு இணங்க மறுப்பது காங்கிரஸின் தர்மமாகும்.

அந்தக் கடமையை, அந்த தர்மத்தைத்தான் காங்கிரஸ் தலைவர்கள் நிறைவேற்றி யிருக்கிருர்கள்.

* * *

காங்கிரஸ் நிராகரித்து விட்டாலும் முஸ்லிம் லீக் ஒப்புக் கொண்டிருக்கிறபடியால் லீக் அங்கத்தினரையும் மற்றும் சில அநாமதேயப் பேர்வழிகளையும் கொண்டு இடைக்கால சர்க்கார் அமைக்கப்படலாம் என்று சிலர் கருதினுர்கள். இது எவ்வளவு சுத்தப் பைத்தியக்காரத்தனமா யிருக்கும் என்பதைப் பிரிட்டிஷ் மந்திரிகளும் வைஸராயும் உணர்ந்து அந்த யோசனையைக் கைவிட்டது நல்ல காலந்தான்.

பழைய கதையை யெல்லாம் அடியோடு மறந்துவிட்டு, பழைய வாதப் பிரதிவாதங்கள், யோசனைகள், புனர் யோசனைகள் எல்லாவற்றையும் நன்ருய்த் துடைத்து விட்டு, புதிய முறையில் யோசித்துத் தேசிய சர்க்கார் அமைக்கப்பட வேண்டும்.

தேசத்தின் சகல பகுதிகளிலிருந்தும் உண்மையான பிரதிநிதிகள் அரசியல் நிர்ணய சபையில் வந்து கூடுவார்கள் அல்லவா? அவர்களிலிருந்து தக்க பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்துத் தேசிய சர்க்காரை அமைக்கலாம்.

எப்படியோ, நல்ல முறையில் இடைக்கால தேசிய சர்க்கார் கூடிய சீக்கிரத்தில் ஏற்பட்டாக வேண்டும். அரசியல் நிர்ணய சபையின் பூரண வெற்றிக்கு, தேசிய சர்க்கார் அமைப்பு இன்றி யமையாததாகும்.

பிரிட்டிஷ் மந்திரிமார்கள் மூவரும் இங்கிலாந்துக்குப் போன பிறகு குளிர்ந்த இடத்தில் உட்கார்ந்து நிதானமாக ஆலோசித்து நல்ல முடிவு செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# சிவகாமியின் சபதம்

கல்கி

## அத்தியாயம் 52

## குளக்கரைப் பேச்சு

தை மாதத்தின் பிற்பகுதியில் ஒரு நாள் காலை நேரத்தில் வானம் மப்பும் மந்தாரமுமா யிருந்தது.

அந்த வருஷம் ஐப்பசி, கார்த்திகையில் நல்ல மழை பெய்திருந்தபடியால், தாமரைக் குளம் நிரம்பிக் கரையைத் தொட்டுக் கொண்டு தண்ணீர் ததும்பிற்று. காலைச் சூரியனை மேகங்கள் மூடியிருந்த போதிலும் செந்தாமரைப் புஷ்பங்கள் நன்றாக மலர்ந்து இனிய நறுமணத்தை நாலு திசையிலும் பரப்பின.

இறகுகளில் சிவப்பு வரியுடன் கூடிய நீல நிற வண்டுகள் மலர்ந்த செந்தாமரைப் பூக்களை வலம் வந்து வந்து இசை பாடி மகிழ்ந்தன.

பளிங்குபோல் தெளிந்திருந்த தடாகத்தின் தண்ணீரில் பெரிய பெரிய கயல் மீன்கள் மந்தை மந்தையாக நீந்தி விளையாடிக் கொண்டிருந்தன.

பச்சைப் பசுங் குடைகளைப் போலத் தண்ணீரிலிருந்து கம்பீரமாக எழுந்து தலை நிமிர்ந்து நின்ற தாமரை இலைகளில் முத்து நீர்த்துளிகள் அங்குமிங்கும் தவழ்ந்து விளையாடின.

தாமரைக் குளத்தைச் சுற்றிலும் வானோங்கி வளர்ந்திருந்த விருட்சங்கள் கப்பும் கிளைகளும் இலைகளும் தளிர்களுமாய்த் தழைத்துப் படர்ந்து சில இடங்களில் குளத்தின் தண்ணீரின் மீது கவிந்து கொண்டிருந்தன.

பச்சைக் கிளிகளும் பல வர்ணக் குருவிகளும் இன்னிசைக் குயில்களும் இனிய கீதம் பாடும் மைனாக்களும் குளிர்ந்த தழைகளுக்கிடையில் உட்கார்ந்து இளந்தளிர்களைக் கோதிக் கொண்டும் மலர்களின் மகரந்தங்களை உதிர்த்துக் கொண்டும் ஆனந்தமாகப் பாடிக் கொண்டும் ஆடிக்கொண்டும் கிளைக்குக் கிளை தாவிக் குதித்துக் கொண்டும் வசந்த காலத்துக்கு வரவேற்புக் கூறிக்கொண்டிருந்தன.

இப்படி இயற்கைத் தேவி தன்னுடைய பூரண எழிலுடன் கொலுவீற்றிருந்த இடத்தில், ஜீவராசிகள் எல்லாம் ஆனந்தத் திருவிழாக் கொண்டாடிக் கொண்டிருந்த சமயத்தில், மானிட ஜன்மம் எடுத்த அபலைப் பெண் ஒருத்தி மட்டும் அந்தக் குளக் கரையில் சோகமே உருக்கொண்டது போல் உட்கார்ந்திருந்தாள்.

அவள் ஆயனச் சிற்பியாரின் செல்வத் திருமகளும், வீராதி வீரரான மாமல்ல சக்கரவர்த்தியின் உள்ளங் கவர்ந்த காதலியும், நடனகலைத் தெய்வத்தின் பரிபூரண அருள் பெற்ற கலைராணியுமான சிவகாமிதான்.

அந்தத் தாமரைக் குளத்தின் காட்சியானது சிவகாமிக்கு எத்தனை எத்தனையோ பூர்வ ஞாபகங்களை,— அளவில்லாத இன்பமும் சொல்ல முடியாத வேதனையும் அளித்த ஞாபகங்களை,— உண்டாக்கிக் கொண்டிருந்தது.

அந்தத் தடாகக் கரை ஓரத்தில் பத்து வருஷத்துக்கு முன்னால் அவள் இதேமாதிரி எத்தனையோ தடவை உட்கார்ந்து தெளிந்த தண்ணீரில் பிரதிபலித்த தன் உருவத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது உண்டு.

சென்ற பத்து வருஷ காலத்தில் அவளுடைய உருவத் தோற்றத்தில் எந்த விதமான மாறுதலும் ஏற்பட்டிருந்ததாகத் தெரியவில்லை. ஏறக்குறைய முன்மாதிரியேதான் இருந்தது.

ஆனால் அவளுடைய உள்ளமானது அந்தப் பத்து வருஷத்தில் எவ்வளவு மாறுதல் அடைந்து விட்டது?

அழகிய தாமரை மலரையும் அதைச் சுற்றிவரும் நீல நிற வண்டுகளையும் பார்க்கும்போது அப்போதெல்லாம்

அவள் உள்ளம் அடைந்த குதூகலம் இப்போது ஏன் ஏற்படவில்லை?

தண்ணீரிலே பிரதிபலித்த அவளுடைய பொன் மேனியின் சௌந்தரியத்தையும் ஆடை ஆபரண அலங்காரத்தையும் பார்த்தபோது அவள் அடைந்த பெருமிதமும் இன்பமும் இப்போது எங்கே போயின?

அந்தக் காலத்தில் அதே தாமரைக் குளக்கரையில் தன்னந் தனியாக உட்கார்ந்து மனோ ராஜ்யம் செய்து கொண்டிருப்பதில் சிவகாமி எவ்வளவோ இன்பத்தை அடைந்ததுண்டு. தனிமையிலே கண்ட அந்த இனிமை இப்போது எங்கே?

சிவகாமிக்குச் சில சமயம் தனது சென்ற கால வாழ்க்கையெல்லாம் ஒரு நெடிய இந்திரஜாலக் கனவு போலத் தோன்றியது. வருங்காலத்தைப் பற்றியோ அவளால் சிந்தனை செய்யவே முடியவில்லை. தான் அத்தாமரைக் குளக்கரையில் உட்கார்ந்திருப்பதும் தன்னைச் சுற்றிலும் காணப்படும் அழகிய இயற்கைக் காட்சிகளும் உண்மைதானா, அல்லது வாதாபி நகரத்துச் சிறை வீட்டில் உட்கார்ந்தபடி காணும் பகற்கனவா என்று அடிக்கடி சந்தேகம் ஏற்பட்டது.

இவ்விதம் நெடுநேரம் ஏதேதோ உருவமில்லாத சிந்தனைகளில் சிவகாமி ஆழ்ந்திருந்தாள். வானத்தை மூடியிருந்த மேகப் படலங்கள் சிறிது விலகி சூரியன் வெளித் தோன்றி அவள் மீது சுளீர் என்று வெய்யில் உறைத்த பிறகு எழுந்திருந்தாள். ஆயனரின் அரண்யச் சிற்ப வீட்டை நோக்கி நடக்கலானாள்.

குதிரைக் குளம்படியின் சத்தம் திடீரென்று கேட்டதும், அந்த அடி ஒவ்வொன்றும் தன் நெஞ்சின் மேல் படுவதுபோன்ற வேதனை அவளுக்கு உண்டாயிற்று. ஏனெனில், அந்தக் குளக்கரையைத் தேடி அவளுடைய காதலர் மாமல்லர் குதிரை மீது எத்தனையோ தடவை வந்திருப்பது சிவகாமிக்கு நினைவு வந்தது. இப்போது வருவது யார்? ஒருவேளை அவர்தானா? — ஆஹா! அவரை எப்படிச் சந்திப்பது? அவருடைய தீக்ஷண்யமான பார்வையை — 'அடி பாதகி! உன்னால் என்னென்ன வினைகள் எல்லாம் வந்தன?' என்று குற்றம் சாட்டும் கண்களை, — எப்படி எதிர்நோக்குவது?

ஒரு குதிரையல்ல, — இரண்டு குதிரைகள் வருகின்றன. இரண்டு குதிரைகள் மீதும் இரண்டு பேர் வருகிறார்கள். தனியாக அவரைச் சந்திப்பதே முடியாத காரியம் என்றால், இன்னொருவரின் முன்னால் அவரைப் பார்ப்பது பற்றிக் கேட்க வேண்டியதில்லை. குளக்கரையின் சமீபத்தில் அடர்த்தியாக மண்டி வளர்ந்திருந்த புதர் ஒன்றின் பின்னால் சிவகாமி ஒளிந்து கொண்டாள்.

குதிரைகள் இரண்டும் சமீபத்தில் வந்தன. ஆம்; முன்னால் வரும் குதிரையின் மீது மாமல்லர்தான் வருகிறார். அம்மா! அவர் முகத்திலேதான் இப்போது என்ன கடூரம்? அன்பு கனிந்து ஆர்வம் ததும்பிக் கள்ளங் கபடற்ற வெள்ளை உள்ளத்தைக் காட்டிய பால் வடியும் முகத்துக்கும் இந்தக் கடுகடுத்த முகத்துக்கும் எத்தனை வித்தியாசம்?

அவருக்குப் பின்னால் மற்றொரு குதிரையின் மேல் வந்தவர் பரஞ்சோதியாயிருக்க வேண்டுமென்று எண்ணிச் சிவகாமி பார்த்தாள். இல்லை, பரஞ்சோதி இல்லை. அந்த மனிதரை இதுவரையில் சிவகாமி பார்த்தது கிடையாது. ஆ! பத்து வருஷத்துக்குள் எத்தனையோ புது சிநேகிதம் அவருக்கு ஏற்பட்டிருக்கும்!

* * *

குதிரைகள் இரண்டும் குளத்தின் கரையில் வந்து நின்றன. இருவரும் இறங்கினார்கள். அந்தப் பழைய விருட்சத்தின் அடியில், — மாமல்லரின் கவிதையழகு வாய்ந்த காதல் ஓலைகளைத் தான் எந்த மரத்தின் பொந்திலே ஒளித்து வைத்திருப்பது வழக்கமோ, அதே மரத்தினடியில், — இருவரும் நின்றார்கள். மாமல்லரின் பேச்சு அவள் காதிலே விழுந்தது. ஆ; தன்னைப் பற்றித்தான் பேசுகிறார்! இது என்ன? அன்னிய மனிதர் ஒருவரிடம் தன் அந்தரங்கக் காதலியைப் பற்றிப் பேசுவதற்கு அவருக்கு அவமானமாயில்லையே? புருஷர்களுக்கு வெட்கம், சங்கோசம் என்பது சிறிதும் கிடையாது போலும்!

மாமல்லரின் குரலில் பின்வரும் வார்த்தைகள் வருவதைச் சிவகாமி கேட்டாள்!

"ஆகா! ஒரு காலத்தில் இந்தத் தாமரைக் குளத்தைப் பார்க்கும்போது எனக்கு எத்தனை குதூகலமாயிருந்தது? எத்தனை தடவை இந்தக் குளத்தைத் தேடி ஆர்வத்துடன் ஓடி வந்திருக்கிறேன்? என் அருமைத் தந்தையிடம் கூட என் உள்ளத்தை ஒளித்து இங்கே கள்ளத்தனமாக எத்தனை முறை வந்திருக்கிறேன்? இதன் அருகில் வரும்போது, சிவகாமி இங்கு இருப்பாளோ, மாட்டாளோ என்ற எண்ணத்தினால் எப்படி என் நெஞ்சம் துடித்துக் கொண்டிருக்கும்? —அவள் இந்த மரத்தடியில் உள்ள பலகையில் தங்க விக்கிரகத்தைப் போல் தனியாக அமர்ந்திருப்பதைப் பார்த்ததும் எப்படி என் உள்ளம் மகிழ்ச்சி ததும்பித் துள்ளிக் குதிக்கும்? — அப்படிப்பட்ட சிவகாமியை இன்று எதிரிட்டுப் பார்க்கவே என் மனம் துணியவில்லை. வீட்டு வாசல் வரைக்கும் வந்து விட்டு, உள்ளே போகத் தயங்கி ஒதுங்கி வந்து விட்டேன். இந்தத் தாமரைக் குளம் அந்தக் காலத்தில் இருந்ததைக் காட்டிலும் அதிக வனப்புடனேதான் இன்று விளங்குகிறது. ஆயினும் இதைப் பார்ப்பதில் எனக்கு மகிழ்ச்சி உண்டாகவில்லை. — மானவன்மரே! இதோ இந்த மரத்தடிப் பலகையைப் பாருங்கள். இந்தப் பலகையின் மேல் நாங்கள் கைகோத்துக் கொண்டு உட்கார்ந்து உலகத்தை மறந்து எங்களையே மறந்து எத்தனையோ நாள் சொர்க்க இன்பத்தை அநுபவித்திருக்கிறோம். அந்தப் பலகை இன்று எப்படி வெயிலிலே உலர்ந்து மழையிலே நனைந்து துண்டு துண்டாய்ப் பிளந்து கிடக்கிறது, பாருங்கள்! என்னுடைய சிதைந்து போன வாழ்க்கைக்கு இந்தப் பலகைதான் சரியான சின்னம்!"......

மானவன்மர் என்று அழைக்கப்பட்ட மனிதர் ஏதோ சொன்னார். அது சிவகாமியின் காதில் விழவில்லை.

மாமல்லர் அவருக்குக் கூறிய மறுமொழி மட்டும் கேட்டது.

"ஆ! மானவன்மரே! என்னால் அது நினைக்கவும் முடியாத காரியம். செடியிலிருந்து கீழே உதிர்ந்த பூ உதிர்ந்து போனதுதான். மறுபடியும் அதைச் செடியிலே பொருத்த முடியுமா? என்னுடைய தந்தை மகேந்திர பல்லவர் ஒரு சமயம் கூறியது எனக்கு நினைவு வருகிறது. 'சிவகாமியும் அவளுடைய அற்புதக் கலையும் தெய்வார்ப்பணம் ஆக வேண்டியவை; கேவலம் மனிதர்களுக்கு உரியவை அல்ல' என்று அவர் கூறினார். மகேந்திர பல்லவர் வாக்கு வீண் போவதில்லை!"

இவ்விதம் சொல்லிக்கொண்டே மாமல்லர் தம் சிநேகிதருடன் குளக்கரையிலிருந்து கீழே இறங்கி நீர் ஓரம் வரையில் போனார். இருவரும் சிறிது நேரத்துக்கெல்லாம் திரும்பி வந்து குதிரைகளின் மீது ஏறிச் சென்றார்கள்.

* * *

சிவகாமி தன்னுடைய வீட்டை நோக்கிக் காட்டுவழியே சென்றபோது அவளுடைய உள்ளத்தில் பெரும் கிளர்ச்சி குடிகொண்டிருந்தது. அந்தக் கிளர்ச்சியில் இன்பமும் வேதனையும் சமமாகக் கலந்திருந்தன.

மாமல்லர் தன்னை மறந்து போய்விடவில்லையென்பதையும் தன்னிடம் அவரது அன்பும் குறைந்துவிடவில்லையென்பதையும் அவளுடைய உள்ளம் நன்கு தெரிந்து கொண்டிருந்தது. ஆயினும் அவர்கள் இருவருக்கும் இடையில் ஏதோ ஒரு பெரிய தடை, — கடக்க முடியாத அகாதமான பள்ளம், — இருப்பதாகவும் அவளுடைய உள்ளுணர்ச்சி கூறியது. அந்தத் தடை எத்தகையது, அந்தப் பள்ளம் எப்படி ஏற்பட்டது என்பதை அவள் தெரிந்து கொள்ள முடியவில்லை.

எப்படியும் மாமல்லரைக் கூடிய சீக்கிரத்தில் ஒரு நாள் பார்க்க வேணும், பார்த்துத் தனது உள்ளம் அவர் விஷயத்தில் முன்போலவேதான் இருக்கிறது என்பதைத் தெரியப்படுத்த வேணும் என்று தீர்மானித்துக் கொண்டாள். என்றென்றைக்கும் தான் அவருடைய அடியாள், அவர் நிராகரித்துத் தள்ளினாலும் அகன்று போக முடியாதவள் என்று உறுதி கூற எண்ணினாள்.

அன்று மத்தியானம் சிவகாமி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து உட்கார்ந்

திருந்ததைப் பார்த்த ஆயனர், தயங்கித் தயங்கி, அவளுடன் பேச்சுக் கொடுக்க முயன்றார்.

"குழந்தாய்! எனக்கென்னமோ இப்போது இந்த நடுக் காட்டிலே வசிப்பது அவ்வளவாகப் பிடிக்கவில்லை. காஞ்சியில் நமக்கு ஒரு வீடு இருக்கிறதல்லவா? அங்கேயே போய் விடலாம் என்று பார்க்கிறேன். உன்னுடைய விருப்பம் என்ன?" என்று கேட்டார்.

"அப்பா! ரொம்ப அதிசயமாயிருக்கிறதே! என் மனதில் இருப்பதையே நீங்களும் கேட்கிறீர்கள். எனக்கும் இந்தக் காட்டில் தனியாயிருக்க இப்போது அவ்வளவு பிரியமாயில்லை. நாலு பேரைப் பார்க்க வேண்டும், பேச வேண்டும் என்றிருக்கிறது. காஞ்சிக்குப் போனால் கமலி அக்காளுடனாவது பேசிப் பொழுது போக்கலாம். நாளைக்கே புறப்படலாமா, அப்பா?" என்றாள் சிவகாமி.

"நாளைக்குப் புறப்படலாம் என்று எண்ணித்தான் நானும் நமசிவாய வைத்தியரிடம் பல்லக்கு அனுப்பி வைக்கும்படி சொல்லியிருக்கிறேன். நாளைத் தினம் காஞ்சி நகரில் பெரிய கோலாகலமாயிருக்கும்."

"நாளை அங்கே என்ன விசேஷம், அப்பா?" என்று சிவகாமி கேட்டாள்.

"நாளைக்குச் சக்கரவர்த்தியின் பட்டணப் பிரவேச ஊர்வலம் நடக்கப் போகிறதாம்! சளுக்கர்களை முறியடித்து மகத்தான வெற்றியுடன் மாமல்லர் திரும்பி வந்திருக்கிறார் அல்லவா?"

"சக்கரவர்த்தி திரும்பி வந்து விட்டாரா?" என்று சிவகாமி கேட்டபோது, அவளுடைய வாழ்க்கையில் கடைசி முறையாகக் கபட வார்த்தையைக் கூறினாள்.

"ஆம்; குழந்தாய்! முந்தாநாள் பல்லவ சைனியம் வந்து சேர்ந்தது. நேற்றுச் சக்கரவர்த்தியும் வந்து விட்டார். எல்லாரும் வடக்குக் கோட்டை வாசலுக்கு அருகில் தண்டு இறங்கியிருக்கிறார்களாம். பட்டணப் பிரவேசத்துக்கு நாளையதினம் நல்ல நாள் குறிப்பிட்டிருக்கிறார்களாம்... ஒரு விஷயம் கேட்டாயா, சிவகாமி! எனக்கு வயதாகிவிட்டதோடு, அறிவும் தளர்ந்து வருகிறது என்று தோன்றுகிறது. இல்லாத பிரமைகள் எல்லாம் ஏற்படுகின்றன. இன்று காலை ஏதோ குதிரை வரும் சத்தம் கேட்டது போலிருந்தது. சக்கரவர்த்திதான் முன் காலத்தில் போல் இந்த ஏழைச் சிற்பியின் வீட்டைத் தேடி வருகிறாரோ என்று நினைத்தேன். அப்புறம் வாசலில் வந்து பார்த்தால் ஒருவரையும் காணவில்லை."

சிவகாமியின் கண்களில் கண்ணீர் துளித்தது. அன்று காலை சக்கரவர்த்தி வந்தது உண்மைதான் என்பதைச் சொல்லலாமா என்று நினைத்தாள். அதற்குத் தைரியம் வரவில்லை.

சிவகாமியின் கண்ணில் கண்ணீரைப் பார்த்த ஆயனர் சற்று நேரம் வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டு மௌனமாயிருந்தார். பிறகு சிவகாமியை நோக்கி இரக்கம் மிகுந்த குரலில் "அம்மா, குழந்தாய்! உன்னிடம் ஒரு விஷயம் சொல்லவேண்டும் என்றிருக்கிறேன்" என்றார்.

"என்ன அப்பா, அது? சொல்லுங்களேன்!" என்றாள் சிவகாமி.

"உலகத்திலே உள்ள எல்லாப் பெண்களையும் போல நீயும் யாராவது ஒரு நல்ல புருஷனை மணந்து கொண்டு சந்தான பாக்கியத்தை அடைய வேண்டும், குழந்தாய்! இந்த வயது காலத்தில் இத்தனை நாள் இல்லாத ஆசை எனக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது. பேரன் பேத்திகள் பெற்றுக் கொஞ்சி விளையாட வேண்டுமென்று விருப்பமாயிருக்கிறது......"

"அப்பா! நான் ஒருத்தி பெண் பிறந்து உங்களுக்கெல்லாம் கொடுத்த துன்பம் போதாதா?" என்று நெஞ்சைப் பிளக்கும் குரலில் சிவகாமி கூறினாள்.

"இதென்ன வார்த்தை? நீ யாருக்கு என்ன துன்பம் தந்தாய், அம்மா!"

"தங்களுடைய கால் ஊனமடைவதற்குக் காரணமாயிருந்தேன். கமலி அக்கா கணவனை இழப்பதற்குக் காரணமானேன்......."

"விதியின் விளைவுக்கு நீ என்ன செய்வாய், சிவகாமி! கண்ணன் தலையில் அவ்விதம் எழுதியிருந்தது. அவன் அகால மரணம் அடைந்தாலும், அவனுடைய குலம் விளங்குவதற்குச்

சின்னக் கண்ணன் இருக்கிறான். என்னுடைய குலமும் அந்தமாதிரி விளங்க வேண்டாமா? உன்னைத் தவிர எனக்கு வேறு யார்?''

"அப்பா! இராஜ குலத்தில் பிறந்தவர்கள் தங்களுக்குப் பிறகு சிம்மாசனம் ஏறவும் அரசாட்சி செய்யவும் சந்ததி வேண்டுமென்று கவலைப்பட வேண்டும். நம்மைப் போன்ற ஏழை எளியவர்களுக்குச் சந்ததியைப் பற்றி என்ன கவலை?'' என்றாள் சிவகாமி.

இதற்குமேலே அச்சமயம் அவளிடம் வாது செய்வதில் பயனில்லையென்று கண்டு ஆயனர் பேச்சை நிறுத்தினார்.

## அத்தியாயம் 53

# பட்டணப் பிரவேசம்

கமலி முன் தடவையைக் காட்டிலும் இந்தத் தடவை சிவகாமியிடம் அதிக அன்பும் ஆதரவும் காட்டியதோடு கலகலப்பாகவும் இருந்தாள்.

முன் தடவை அவள் கண்ணனுடைய அகால மரணத்தைப் பற்றி அப்போதுதான் கேள்விப்பட்டபடியால் அழுகையும் அலறலும் ஆத்திரமும் ஆங்காரமுமாயிருந்தாள். அடிக்கடி சிவகாமியைப் பார்த்து, "அடி பாதகி! உன்னையும் கெடுத்துக் கொண்டு என்னையும் கெடுத்து விட்டாயே? நீ முன்னமே செத்திருக்கக் கூடாதா?'' என்று திட்டினாள். அவள் அவ்வாறு ஆத்திரப்படுவதற்கு நியாயமிருக்கிறது என்று எண்ணிச் சிவகாமி பொறுமையாயிருந்ததுடன் தானும் அவளோடு சேர்ந்து அழுது தன்னைத் தானே நொந்து கொண்டும் திட்டிக்கொண்டும் கமலிக்கு ஆறுதல் அளித்தாள்.

இந்த முறை கமலி சிறிது ஆறுதலும் அமைதியும் அடைந்திருந்தாள். வாதாபியில் சிவகாமியின் வாழ்க்கையைப் பற்றி விவரமாகச் சொல்லும்படி வற்புறுத்தினாள். கண்ணனும் தானும் 'புலிகேசி' நாடகம் போட்டுப் பல்லவ வீரர்களுக்கு ஊக்க மூட்டியது பற்றிச் சொன்னாள். அதையெல்லாம் கேட்கக் கேட்கச் சிவகாமிக்குத் துக்கம் பொங்கிற்று. கண்ணனுடைய உயர்ந்த குணங்களைப் பற்றியும் கமலியிடம் அவன் கொண்டிருந்த அளவில்லாக் காதலைப் பற்றியும் மூச்சு விடாமல் அந்தத் தோழிகள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அச்சமயம், வெளியிலே போயிருந்த சின்னக் கண்ணன் "அம்மா! அம்மா!'' என்று கூவிக் கொண்டு உள்ளே ஓடி வந்தான். கமலி அவனை வாரி அணைத்துக்கொண்டு, "தங்காய்! இனிமேல் உனக்கும் எனக்கும் இந்தப் பிள்ளைதான் கதி. இவன் வளர்ந்து பெரியவனானபிறகுதான் நம் இருவரையும் காப்பாற்ற வேண்டும்'' என்றாள்.

அதைக் கேட்டதும் சிவகாமிக்குச் 'சுரீர்' என்றது. கமலி அக்கா ஏன் இப்படிச் சொல்கிறாள்? அவள் கணவனை இழந்த காரணத்தினால் தானும் அவளைப் போலவே ஆகிவிட வேண்டுமா? மாமல்லரையும் அவருடைய காதலையும் வெறுத்து விட வேண்டுமா?

இவ்விதம் சிவகாமி எண்ணமிட்டுக் கொண்டிருந்தபோது வீதியில் வாத்திய முழக்கங்களும், ஜயகோஷங்களும், ஜனங்களின் கோலாகலத் தொனிகளும் கலந்த ஆரவாரம் கேட்கத் தொடங்கியது.

ஏற்கெனவே ஆயனர் மூலமாகச் சக்கரவர்த்தியின் பட்டணப் பிரவேச ஊர்வலத்தைப் பற்றிச் சிவகாமி தெரிந்து கொண்டிருந்தாள். அதைப் பார்க்க வேண்டுமென்று அவளுக்கு மிக்க ஆவலாயிருந்தது.

"அக்கா! நாமும் பலகணியண்டை போய் ஊர்வலத்தைப் பார்க்கலாம்!'' என்று கிளம்பினாள்.

"உனக்கும் எனக்கும் பட்டணப் பிரவேசமும் ஊர்வலமும் என்ன வேண்டிக் கிடக்கிறது? பேசாமலிரு!'' என்றாள் கமலி.

கண்ணனை இழந்ததினால் மனங் கசந்து போய்க் கமலி அப்படிப் பேசுகிறாள் என்று சிவகாமி நினைத்தாள்.

"என்ன அப்படிச் சொல்கிறாய், அக்கா! சக்கரவர்த்தி என்னுடைய

சபதத்தை நிறைவேற்றுவதற்காக எத்தனை பாடு பட்டார்? அவருடைய விஜயோற்சவத்தை நகரத்து மக்கள் எல்லாம் கொண்டாடும்போது......"

கமலி குறுக்கிட்டு, "நீயுமாச்சு. உன் சபதமும் ஆச்சு. உன் அழகான சக்கரவர்த்தியும் ஆச்சு! அடி பைத்தியமே, உனக்கு மானம், ரோஷம் ஒன்று மில்லையா? அதையெல்லாம் வாதாபியிலேயே பறிகொடுத்துவிட்டு வந்தாயா?" என்றாள்.

கமலி இப்படிப் பேசியது சிவகாமிக்குச் சிறிதும் விளங்காமல் மேலும் மனக் குழப்பத்தை அதிகமாக்கிற்று.

கமலி மேலும், "அடி தங்காய்! நீயும் மாமல்லரும் கல்யாணம் செய்து கொண்டு தங்க ரதத்தில் நவரத்தினக் குடையின் கீழ் உட்கார்ந்து ஊர்வலம் வர, உன் அண்ணன் ரதம் ஓட்டும் காட்சியைக் கண்ணால் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டேனே! அது நிராசையாய்ப் போய் விட்டதே!" என்று கண்ணில் நீர் ததும்பக் கூறிய போது, அவள் கண்ணன் மரணத்தை எண்ணித்தான் இப்படி மனங் கசந்து பேசுகிறாள் என்று நினைத்துச் சிவகாமி மௌனமாயிருந்தாள்.

சற்றுநேரத்துக்கெல்லாம் ஊர்வலம் அருகிலே வந்து விட்டதாகத் தோன்றியதும் சிவகாமி ஆவலை அடக்க முடியாதவளாய் எழுந்து பலகணியை நோக்கிச் சென்றாள். கமலியும் அவளைத் தொடர்ந்து போனாள்.

ஆயனரின் காஞ்சி வீடு இராஜ வீதியில் இருந்தது. அந்த வீதி வழியே வந்த சக்கரவர்த்தியின் பட்டணப் பிரவேச ஊர்வலம் கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது.

ஊர்வலத்தின் முன்னணியில் ஜய பேரிகைகளை முதுகில் சுமந்து சென்ற பிரம்மாண்டமான ரிஷபங்களும், அவற்றின் பின்னால் பலவகை வாத்திய கோஷ்டிகளும், கொடிகள் விருதுகளைத் தாங்கிய வீரர்களும், அலங்கார யானைகளும் குதிரைகளும் ஒட்டகங்களும் போவதற்கு ஒரு நாழிகைக்கு மேல் ஆயிற்று.

பிறகு, அரபு நாட்டிலேயிருந்து வந்த அழகிய வெண்புரவிகள் பூட்டிய சக்கரவர்த்தியின் தங்க ரதம் காணப்பட்டதும், வீதியின் இருபுறத்து மாளிகை மாடங்களிலிருந்தும் ஜனங்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். மங்களகரமான மஞ்சள் அரிசியும் நெற் பொரியும் தூவினார்கள். இனிய மணம் பொருந்திய சந்தனக் குழம்பை வாரித் தெளித்தார்கள். "வாதாபி கொண்ட மாமல்ல சக்கரவர்த்தி வாழ்க! வாழ்க!! வீராதி வீரர் நரசிம்ம பல்லவேந்திரர் வாழ்க! வாழ்க!!" என்பவை போன்ற எத்தனையோ விதவிதமான ஜய கோஷங்கள் வானத்தை எட்டும்படி பதினாயிரம் குரல்களிலே எழுந்து முழங்கின.

சக்கரவர்த்தியின் ரதம் அருகில் வந்துவிட்டது என்று அறிந்ததும் சிவகாமியின் இருதயம் ஏனோ வேகமாக அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. தங்க ரதத்திலே பூட்டிய அழகிய வெண்புரவிகளையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு மிக்க பிரயத்தனத்துடன் கண்களைத் திருப்பி ரதத்திலே அமைத்திருந்த ரதத்தின் சிம்மாசனத்தை நோக்கினாள்.

**ஆகா! இது என்ன? சக்கரவர்த்திக்கு அருகிலே அவருடன் சரியாசனத்திலே வீற்றிருக்கும் அந்தப் பெண்மணி யார்?**

சிவகாமியின் தலை சுழன்றது; பலகணி வழியாக வீதியிலே தெரிந்த வீடுகள் சுழன்றன; தங்க ரதம் சுழன்றது; அதற்கு முன்னும் பின்னும் வந்த யானை, குதிரை, பரிவாரங்கள் எல்லாம் சுழன்றன; ஜனங்களும் சுழன்றார்கள்.

சிவகாமி சுவரைக் கையினால் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மறுபடியும் நன்றாகப் பார்த்தாள்.

வாஸ்தவந்தான்; அவளுடைய கண்கள் அவளை ஏமாற்றவில்லை.

மாமல்லருக்குப் பக்கத்திலே ஒரு பெண் அரசிதான் உட்கார்ந்திருக்கிறாள். ஆஹா! எப்பேர்ப்பட்ட அழகி அவள்! முகத்திலேதான் என்ன களை! ரதியோ, இந்திராணியோ, அல்லது மகாலக்ஷ்மியேதானோ என்றல்லவா தோன்றுகிறது!

"அவள் யார், அக்கா? சக்கரவர்த்தியின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறவள்?" என்ற வார்த்தைகள் சிவ

காமியின் அடித் தொண்டையிலிருந்து கம்மிய குரலில் வெளிவந்தன.

"இது என்ன கேள்வி? அவள்தான் பாண்டிய குமாரி; மாமல்லரின் பட்ட மகிஷி. வேறு யார் அவர் பக்கத்திலே உட்காருவார்கள்?" என்றாள் கமலி.

"அக்கா! அவருக்குக் கலியாணம் ஆகிவிட்டதா? எப்போது?" என்ற சிவகாமியின் கேள்வியில் எல்லையில்லாத ஆச்சரியமும் ஆதங்கமும் மனக் குழப்பமும் கலந்து தொனித்தன.

"அடி பாவி! உனக்குத் தெரியாதா, என்ன? யாரும் சொல்லவில்லையா? உனக்கு எல்லாம் தெரியும் என்றல்லவா நினைத்தேன்? மாமல்லருக்குக் கலியாணம் ஆகி வருஷம் ஒன்பது ஆயிற்றே? அந்தச் சதிகார மகேந்திர பல்லவன் மகனுக்குக் கலியாணத்தைப் பண்ணி விட்டுத்தானே கண்ணை மூடினான்!" என்றாள் கமலி.

"அவரை ஏன் திட்டுகிறாய், கமலி! நல்லதைத்தான் செய்தார் மகேந்திரர். இரண்டு பேரும் ரதத்தில் உட்கார்ந்



இருப்பது எவ்வளவு பாக்யமாயிருக்கிறது? இப்போதுதான் எனக்கு உண்மை தெரிகிறது; என் அறிவீனமும் தெரிகிறது!'' என்று சிவகாமியின் உதடுகள் முணுமுணுத்தன.

''என்னடி உளறுகிறாய்? மகேந்திரர் நல்லதைச் செய்தாரா? குடி கெடுக்க அஞ்சாத வஞ்சகராயிற்றே அவர்?'' என்றாள் கமலி.

சிறிது நேரம் வரையில் சிவகாமி கண்ணைக் கொட்டாமல் இராஜ தம்பதிகளைப் பார்த்த வண்ணம் நின்றாள்.

தங்க ரதம் நகர்ந்து மேலே சென்றது.

அடுத்தாற்போல், பட்டத்து யானை வந்தது. அதன்மேல் அமர்ந்திருந்த குழந்தைகளைப் பார்த்து, ''இவர்கள் யார்?'' என்றாள் சிவகாமி.

''வேறு யார்? பல்லவ குலம் தழைக்கப் பிறந்த பாக்யசாலிகள்தான். மாமல்லருக்கும் பாண்டிய குமாரிக்கும் பிறந்த குழந்தைகள். மகன் பெயர் மகேந்திரன்; மகளின் பெயர் குந்தவி'' என்று கமலி சொன்னாள்.



சிவகாமி மேலே வார்த்தை ஒன்றும் பேசவில்லை. அவளுடைய உள்ளம், "ஆகா! அப்படியானால் பல்லவ குலத்தின் சந்ததியைப் பற்றிக் கவலையில்லை!" என்று எண்ணிற்று.

அதே சமயத்தில் அவளுடைய இருதயத்தில் ஏதோ ஒரு நரம்பு 'படார்' என்று அறுபட்டது.

பட்டத்து யானைக்குப் பின்னால் இன்னொரு யானை வந்தது. அதன் அம்பாரியில் புவனமகாதேவியும் மங்கையர்க்கரசியும் இருந்தார்கள்.

"இராஜ மாதாவுக்கு அருகில் உள்ள பெண்ணைப் பார்த்தாயா, சிவகாமி! அவளுக்கு அடித்த குருட்டு யோகத்தை என்னவென்று சொல்லட்டும்? யாரோ பழைய சோழ குலத்து இளை வம்சத்தைச் சேர்ந்தவளாம். மங்கையர்க்கரசி என்று பெயராம். நெடுமாற பாண்டியனை இந்த அதிர்ஷ்டக்காரி மணந்து கொள்ளப் போகிறாளாம். எப்படியும் இராஜ குலத்திலே பிறந்தால் அந்தமாதிரி வேறேதான்!" என்று சொல்லி வந்த கமலி, சிவகாமி அங்கேயிருந்து நகர்வதைப் பார்த்து, "அடியே! ஏன் போகிறாய்!" என்றாள்.

உண்மையில், கமலி கடைசியாகச் சொன்னது ஒன்றும் சிவகாமியின் காதில் விழவில்லை. பட்டத்து யானை மீதிருந்த குழந்தைகளையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, அந்த யானை நகர்ந்ததும் பலகணியின் பக்கத்திலிருந்து புறப்பட்டுச் சென்றாள். வீட்டு முற்றத்தின் ஓரத்தில் உட்கார்ந்து வெகு நேரம் வரையில் சித்தப் பிரமை கொண்டவள் போலச் சிலையாகச் சமைந்திருந்தாள்.

ஊர்வலம் முழுதும் போனபிறகு கமலி அவளிடம் வந்து சேர்ந்தாள். "அடி பெண்ணே, ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறாய்! ஒரு குரல் அழுது தொலையேன்! சக்கரவர்த்தியைக் காதலித்ததினால் என்ன? அழுவதற்குக் கூடவா உனக்குப் பாத்தியதை இல்லாமல் போயிற்று!" என்று கேட்டாள்.

சிவகாமிக்கு எங்கிருந்தோ திடீரென்று அழுகை வந்தது. வறண்டிருந்த கண்களில் கண்ணீர் வெள்ளமாகப் பெருகத் தொடங்கிற்று.

கமலியின் மடியில் குப்புறப்படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதாள்.

அவ்விதம் ஒரு நாழிகை நேரம் அழுத பிறகு விம்மல் நின்றது; கண்ணீரும் ஓய்ந்தது.

சிவகாமியின் இருதயத்திலேயிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கியது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. இதற்கு முன் அவள் என்றும் அறியாத அமைதியும் சாந்தமும் உள்ளத்திலே குடிகொண்டது.

## அத்தியாயம் 55

## தலைவன் தாள்

அன்று மாலை ஆயனரிடம் சிவகாமி தனியாக வந்து, "அப்பா! நான் கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்று சொன்னீர்கள் அல்லவா? அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்!" என்றாள்.

ஆயனருக்கு அகம் நிறைந்த மகிழ்ச்சியினால் மூச்சு நின்றுவிடும் போலிருந்தது. சிவகாமியை உற்று நோக்கி, அவளுடைய முக மலர்ச்சியையும் பார்த்துவிட்டு, "அதற்கென்ன, குழந்தாய்! கூடிய சீக்கிரம் உனக்குத் தக்க நாயகனைத் தீர்மானித்து மணம் செய்து வைக்கிறேன்!" என்றார்.

"அப்பா! எனக்கு நாயகனைத் தேர்ந்தெடுக்கும் சிரமத்தைத் தங்களுக்கு நான் வைக்கவில்லை. ஏகாம்பரநாதரையே என் பதியாக வரித்துக் கொண்டேன்!" என்றாள் சிவகாமி.

தம் அருமை மகளுக்குச் சித்தப் பிரமை முற்றி விட்டதோ என்று ஆயனர் ஐயமடைந்தார். இன்னும் சிறிது பேசி, அவள் தெளிந்த அறிவுடன் இருக்கிறாள் என்பதைக் கண்ட பிறகு, இது சித்தப் பிரமை அல்ல,—பக்தியின் முதிர்ச்சிதான் என்று நிச்சயமடைந்தார்.

அச்சமயம் திருநாவுக்கரசர் பெருமான் அருகாமையில் உள்ள க்ஷேத்திரத்திலேதான் இருக்கிறார் என்று அறிந்து, அவரிடம் சென்று யோசனை கேட்டார்.

வாகீசர் எல்லாவற்றையும் கேட்ட பின்னர், "ஆயனரே! உமது குமாரியின் விஷயத்தில் என் மனதிலே தோன்றியது உண்மையாய்ப் போய் விட்டது. மானிடப் பெண் யாரும் அடைந்திருக்க முடியாத துன்பங்களை அவள் அடைந்து விட்டாள். இனி, அவளுக்கு அத்தனை துன்பங்களுக்கும் பரிகாரமான பேரின்பம் காத்திருக்கிறது. உம்முடைய குமாரிக்குச் சிவகாமி என்று பெயர் இட்டீர்கள் அல்லவா? அதற்கேற்ப, அவள் சிவபெருமானிடமே காதல் கொண்டு விட்டாள். அவளுடைய விருப்பத்துக்கு இடையூறு செய்யாமல் நிறைவேற்றி வையுங்கள்" என்று அருளினார்.

• • •

திங்கள் மூன்று சென்ற பிறகு, வாதாபி வெற்றியின் கோலாகலக் கொண்டாட்டங்கள் எல்லாம் ஒருவாறு முடிந்தபிறகு, ஒரு நல்ல நாளில் ஏகம்ப நாதரின் சந்நிதிக்கு ஆயனரும், சிவகாமியும், கமலியும், இன்னும் சிலரும் வந்தார்கள்.

அச்சமயம் ஆலயத்தில் ஜனங்களின் கூட்டம் அதிகமாக இல்லை.

கோயில் குருக்கள் சுவாமிக்கு அர்ச்சனை, தீபாராதனை எல்லாம் செய்து தட்டிலே பிரஸாதம் கொண்டு வந்து கொடுத்தார்.

அந்தத் தட்டில் பழம், புஷ்பம், விபூதி, குங்குமம் ஆகிய பிரஸாதங்களுடனே, ஆயனரின் முன்னேற்பாட்டின்படி திருமணத்துக்குரிய திருமாங்கல்யமும் இருந்தது.

சிவகாமி அந்தத் திருமாங்கல்யத்தையும் புஷ்ப ஹாரத்தையும் பக்தியுடனே பெற்றுத் தன் கழுத்திலே அணிந்து கொண்டாள்.

பின்னர், நடனராஜனாகிய இறைவனுடைய சந்நிதியிலே நின்று நடனமாடத் தொடங்கினாள்.

சிறிது நேரம் ஆனந்த பரவசமாக ஆடிய பிறகு,

**முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்**
**மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்**

என்னும் திருநாவுக்கரசரின் திருப்பதிகத்தைப் பாடிக் கொண்டு அதற்கேற்ப அபிநயம் பிடிக்கலானாள்.

சிவகாமி நடனம் ஆடத் தொடங்கியதிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகச் சந்நிதியில் ஜனங்கள் சேரத் தொடங்கினார்கள்.

அனைவரும் மெய் மறந்து பரவசமடைந்து தங்களைச் சிவபெருமானிடம் காதல் கொண்ட கன்னிகையாகவே எண்ணிக் கொண்டு பக்தி வெள்ளத்தில் மிதந்தார்கள்.

அச்சமயம் யாரும் எதிர்பாராத வண்ணமாக, மாமல்ல சக்கரவர்த்தியும் அவ்விடம் வந்து சேர்ந்தார்.

முன்னொரு தடவை இதே பாடலுக்கு அபிநயம் பிடித்துக் கொண்டிருந்தபோது சிவகாமி மாமல்லரின் வரவை அறிந்து அவர் நினைவாகவே அபிநயம் செய்ததுண்டு.

இப்போது சிவகாமி மாமல்லர் வந்ததைக் கவனிக்கவேயில்லை.

அவளுடைய கண்களையும் கருத்தினையும் முழுதும் ஏகம்ப நாதரே கவர்ந்து கொண்டிருந்தார்.

வேறு எதையும் அவளுடைய கண்கள் பார்க்கவில்லை; வேறு யாருக்கும் அவளுடைய உள்ளத்திலே இடமிருக்கவில்லை.

மாமல்லர் மற்ற எல்லாரையும் போல் சற்று நேரம் தாமும் மெய் மறந்து நின்று சிவகாமியின் அபிநயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

தம்மை அறியாமல் அவருடைய கண்களிலே கண்ணீர் அருவியாகப் பெருகத் தொடங்கியது.

கண்ணீர் பெருகத் தொடங்கியதும் தாம் மாமல்ல சக்கரவர்த்தி என்பதும் பக்கத்திலுள்ளவர்கள் தம்மைக் கவனிப்பார்கள் என்பதும் அவருக்கு நினைவு வந்தது.

சத்தம் சிறிதும் ஏற்படாத வண்ணம் இறைவனுடைய சந்நிதியிலிருந்து மாமல்லர் நழுவிச் சென்றார்.

அவர் ஆலயத்தின் முன் வாசலைத் தாண்டிக் கொண்டிருந்தபோது,

**தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!**

என்னும் பாடலின் கடைசி வரி சிவகாமியின் உணர்ச்சி நிறைந்த இனிய குரலில் கேட்டுக் கொண்டிருந்தது.

## சிவகாமியின் சபதம் முற்றிற்று

# காலக்ஷேபம்

### வாஸ்தவந்தான்!

"துப்பறியும் கதைகளும், மர்மக்கதைகளும் எழுதுபவர்கள் அநேகமாய்ப் புருஷர்களாய்த்தான் இருக்கிறார்கள்......"

"இதைப் பற்றி யோசிக்க வேண்டுமா? கடைசிப் பக்கம் வரையும் எந்த ஸ்திரீயாவது இரகசியத்தைக் காப்பாற்றி வைத்துக் கொள்ள முடியுமா?" —கே. பாண்டுரங்கம்.



### முடிந்த உதவி

குமாஸ்தா:—ஸார்! நானும் சின்ன வயதிலிருந்து என் நரைக்கும் வரையில் தங்களிடம் வேலை பார்த்திருக்கிறேன். இப்பொழுது என்னைப் போகச் சொல்லுகிறீர்கள். தங்களால் முடிந்த உதவி செய்யவேண்டும்.

முதலாளி:— சரி! இந்தாரும், நரைமயிரைக் கருக்க வைக்கும் தைலம்!

—பி. கே. கிருஷ்ணமூர்த்தி.



### தொலைவதில் திருப்தி!

மனைவி:—என் தாயாருக்கு இரண்டு ரூபாய் பணம் வேண்டுமாம்.

புருஷன்:—என் கையில் தம்பிடிகூடக் கிடையாது. இப்போது ரூபாய் எதற்கு?

மனைவி:— ஊருக்குப் போக ரயில் சார்ஜு வேண்டுமாம்.

புருஷன்:— ஊருக்கா போகிறாள்? இதோ, இந்தா ரூபாய் நாலு! —எஸ். வேலு.



### புதிய சண்டை!

தாயார்:—என்னடா, மணி! ராமு! இப்போதுதானே சண்டை போட்டுக் கொண்டீர்கள் என்று உங்களைச் சமாதானப்படுத்தி பக்ஷணம் வாங்கிக் கொள்ளும்படி ஒரு அணா கொடுத்தேன்! மறுபடியும் ஏன் சண்டை போட்டுக் கொள்ளுகிறீர்கள்!

மணி, ராமு:—அந்த பக்ஷணங்களைப் பங்கு போட்டுக் கொள்ளுவதில்தான் இப்போது சண்டை! —என். வி. டி.



### சரியான பதில்

ஒரு பெரிய உத்தியோகஸ்தர் தமது பூட்ஸ்களுக்குப் பாலிஷ் போட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில் அவரது நண்பர் ஒருவர் பார்த்து விட்டு "அடடா! உம்முடைய பூட்ஸுகளுக்கு நீரா பாலிஷ் போடுகிறீர்!" என்றார்.

உத்தியோகஸ்தர்:—ஆமாம், ஸார்! நீங்கள் யாருடைய பூட்ஸுகளுக்குப் பாலிஷ் போடுவது வழக்கம்? —ம. மகாதேவன்.

ஆனால்......:




பஸ் நிறைந்துவிட்டது




டிராம் நிறைந்துவிட்டது




சினிமா நிறைந்துவிட்டது



ஹோட்டல் நிறைந்து விட்டது



ஆனால், வயிறுதான் நிறையவில்லை. —சாமா—



J&N REMINDERS!

ஞாபகக் குறிப்பு

வேலையின் வகை: சாமான்களைப்
பளபளப்பாக வைத்துக் கொள்
ளவும் அவைகளை அழகு
பெறவும் செய்ய வேண்டுமா?

அவசியமாக வேண்டியது: "ஜென
ஸன்ஸ் வேக்ஸ் பாலிஷ்" (Jenson's
Wax Polish). மரச்சாமான்கள்,
தளங்கள் நீடித்த பளபளப்பை
அளிக்கவும் மோட்டார் வண்டி
களின் தோற்றத்தைப் புதுப்பித்து
அழகு பெறச் செய்யவும் மிக அவசியம்






JENSON & NICHOLSON

MAKERS OF PAINTS

# வட்டமேஜை

அரிசி, நெல் வர்த்தகர்கள் சங்கம்.

காரைக்கால்
19—6—1946

ஐயா, "கல்கி" 9—6—46 இதழில் 8-வது பக்கத்தில் "மணங்குக்கு ஒரு ரூபாய்" என்ற தலைப்பில் "ஜூன், ஜூலை மாதங்களில் சர்க்காரிடம் நெல் கொடுப்பவர்களுக்கு மணங்குக்கு ஒரு ரூபாய் விதம் தரப்படும்" என்கிற திட்டத்தை, மணங்குக்கு ஒரு ரூபாய் என்றும், பட்டணம் படி 24 அடங்கிய தஞ்சாவூர்க் கலம் ஒன்றுக்கு ஒன்றரை ரூபாய் ஆகிறதென்றும், நெல்லை அளந்து கொடுக்கும் விவசாயிக்கு மட்டுமே மேற்படி இனாம் கொடுப்பது முறையாகும் என்றும், கள்ள மார்க்கெட் வியாபாரிக்கு மேற்படி இனாம் கொடுக்கக் கூடாதென்றும், அப்படிக் கொடுப்பது விவசாயிக்கு அநீதி இழைத்துக் கொள்ளைக்காரர்களுக்கு உதவி செய்வதாகுமென்றும் விளக்கியிருக்கிறீர்கள். 16—6—46 இதழில் 5-வது பக்கத்தில் "ரொம்ப சரி" என்ற தலைப்பில், ஒரு மணங்கு நெல்லுக்கு ஒரு ரூபாய் விதம் (அதாவது, கலத்துக்கு ஒன்றரை ரூபாய் விதம்) சர்க்காரால் கொடுக்கப்படும் போனஸ் விவசாயிகளுக்கு மட்டுந்தான் என்றும், ரைஸ் மில் முதலாளிகளுக்கல்லவென்றும், அவர்கள் அதிக விலை கிடைக்குமென்று காத்திருக்க வேண்டாமென்றும் சென்னை சர்க்கார் உணவு இலாகா ஓர் அறிக்கை வெளியிட்டிருப்பதாகவும் அது பற்றித் தாங்கள் பாராட்டுவதாகவும் எழுதியிருக்கிறீர்கள். தங்கள் கவனத்திற்குக் கீழ்க்கண்ட விஷயங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

(1) தஞ்சாவூர் ஜில்லா ரைஸ் மில்காரர்கள் கள்ளமார்க்கெட் வியாபாரிகளல்ல. அவர்கள் தயாரிக்கும் அரிசி பூராவும் தஞ்சாவூர் கலம் ஜி. பி. ஓ. அவர்கள் உத்தரவுப்படி விற்பனையாகி வருகிறது. இது நன்கு தெரிந்த உண்மை. நிலைமை இவ்விதமிருக்கும்போது அவர்கள் கள்ள மார்க்கெட் வியாபாரிகளாக இருக்க முடியுமா என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டியது. அவர்கள் மிராசுதார்களிடமிருந்து நிர்ணய விலைப்படி நெல்லை வாங்கிக் கச்சல் பாடு, வட்டி நஷ்டம் முதலியவைகளுக்கு உட்பட்டு, மில் சாமான்கள் கிடைக்காத இந்தக் காலத்தில் வெகு பிரயாசையின் பேரிலும் அதிகப் பணச் செலவு செய்தும் சாமான்கள் வாங்கி, அரிசி தயார் செய்து கலம் ஜி. பி. ஓ. அவர்களின் உத்தரவுப்படி அரிசியை நிர்ணய விலைக்கும் பல சமயங்களில் அதற்கும் குறைவான விலைக்கும் டெலிவரி செய்துகொண்டு வருவதன் மூலம் உணவுப் பொருள் நெருக்கடியைத் தவிர்ப்பதற்கு ஒத்துழைத்து வருகிறார்கள். அவர்களைத் தாங்கள் கள்ள மார்க்கெட் வியாபாரிகளென்று பிரசுரித்து அவர்களுக்கும் போனஸ் கொடுக்கக் கூடாது என்று எழுதியிருக்கிறீர்கள். நெல்லை அளந்து கொடுக்கும் விவசாயிகளுக்குப் போனஸ் கொடுப்பது நியாயமே. அதை யாரும் மறுப்பதற்கில்லை. அப்படிக் கொடுக்கும்போது அந்த நெல்லை வாங்கிப் பலவித கஷ்ட நஷ்டங்களுக்கும் உட்பட்டு அரிசி தயார் செய்து கொடுக்கும் வியாபாரிகளுக்கும் அவர்கள் சப்ளை செய்யும் அரிசிக்கும் போனஸ் கொடுப்பதுதானே நியாயம்? அப்படி வியாபாரிகளுக்கும் போனஸ் கொடுப்பது விவசாயிக்கு அநீதி இழைப்பதாகவும், கொள்ளைக்காரர்களுக்கு உதவி செய்வதாகவும் எவ்விதம் ஏற்படும்?

(2) மணங்கு ஒன்றுக்கு நிறை பவுண்ட் 82—2/7. பட்டணம் படி 24 அடங்கிய தஞ்சாவூர்க் கலம் ஒன்றுக்கு நெல்லின் நிறை பவுண்ட் 60 முதல் 63 வரை இருக்கும். அதாவது ஒரு கலம் நெல்லுக்கு ¾ மணங்கு ஆகிறது. மணங்கு ஒன்றுக்கும் போனஸ் ஒரு ரூபாய் என்றால் ஒரு கலம் (முக்கால் மணங்கு) நெல்லுக்குப் போனஸ் அணா பன்னிரண்டுதானே கணக்கின் உள்ளபடி ஆகிறது. தாங்கள் தவறுதலாக அதை இரட்டித்து, கலம் ஒன்றுக்குப் போனஸ் ஒன்றரை ரூபாய் என்று 9-6-46 & 16-6-46 இதழ் இரண்டிலும் பிரசுரித்திருக்கிறீர்கள்.

இவ்விதம் தவறான கணக்குப் போட்டும், ரைஸ் மில் முதலாளிகளைப் பற்றித் தவறான நோக்கம் கொண்டும் தமிழ் மக்களின் அன்புக்கும், ஆதரவுக்கும் உரிய "கல்கி" இதழில் பிரசுரிக்கலாமா?

இப்படிக்கு,
பி. கே. அய்யா.

for Rm. A. S. வெங்கடாசலபதி பிள்ளை.
அக்கிராசனர்.

[கணக்குத் தவறுதலைத் திருத்திக் கொள்கிறோம். தஞ்சாவூர்க் கலம் ஒன்றுக்கு 12 அணா போனஸ் கொடுப்பது மிகவும் நியாயமானதே. நெல் உற்பத்தி அதிகமாக வேணுமானால் விலைக் 'கண்ட்ரோல்' உள்ள வரையில் மேற்கண்டபடி விவசாயிகளுக்குப் போனஸ் கொடுக்க வேண்டும்; அல்லது நெல்லின் விலையையே உயர்த்திக் கொடுக்க வேண்டும். ஆனால் விவசாயிக்குத்தான் கொடுக்கவேண்டுமேயன்றி, விவசாயியிடம் ஏற்கெனவே குறைந்த விலைக்கு நெல் வாங்கி வைத்திருக்கும் முதலாளிகளுக்கு மேற்படி போனஸ் கொடுப்பதற்கு எவ்வித நியாயமும் இல்லை. ரைஸ் மில் முதலாளிகளைக் கள்ள மார்க்கெட் வியாபாரிகள் என்று நாம் குறிப்பிட்டதாகச் சந்தேகிக்க இடமேயில்லை. "கள்ள மார்க்கெட் வியாபாரிகளுக்குப் போனஸ் சேரக் கூடாது" என்று நாம் எழுதியபோது, நியாயமான வர்த்தகம் செய்யும் ரைஸ் மில்காரர்களைப் பற்றி நினைக்கவே இல்லை. ரைஸ் மில்காரர்களுக்கு நஷ்டம் ஏற்படுவதாயிருந்தால் அதைத் தனியாக எடுத்துக் காட்டிச் சர்க்காரிடம் பரிகாரம் தேடிக் கொள்வது நியாயமே. ஆனால் நெல் உற்பத்தி அதிகமாவதற்காக ஏற்பட்ட போனஸ் பணத்தை விவசாயிக்கு மட்டும் கொடுப்பதுதான் முறை.—ஆசிரியர்.]

# பிறந்த நாள் பரிசு

சு. ரா



அன்று வழக்கம்போல் நான் தபாலாபீசுக்குச் சென்றிருந்தேன். தபால் வாங்க வந்திருந்தவர்கள் கழுவிக் கொண்டிருந்தார்கள். "இன்று என் தேவதாஸ் கூப்பிடவில்லை?" என்று எண்ணிக் கொண்டே ஜன்னல் வழியாக உள்ளே பார்த்தேன். தேவதாஸ் இன்றியே தபாலாபீசு வேலை செய்து கொண்டிருந்தது.

தேவதாஸ் வீடு தேடிச் சென்றேன்.

குறித்த வீட்டை யடைந்தேன். உட்புறம் தாழ்ப்பாளிடப் பட்டிருந்தது. "ஸார்!" என்று கூப்பிட்டேன். இரண்டொரு நிமிஷங்கள் சென்று கதவு மெதுவாகத் திறந்துகொண்டது. திறந்த கதவின் வழியாக ஒரு அழகிய முகம் வெளிப்பட்டு "யார்?" என்று கேட்டது.

நான் ஒரு கணம் பின் வாங்கினேன். அவளுடைய அழகிய முகமும், அதிலிருந்த இரு கரு விழிகளும் என்னை என்னவோ செய்தன என்பது உண்மையே யாயினும் நான் பின் வாங்கியதற்கு வேறொரு காரணமும் இருந்தது.

நானும், தேவதாஸும் சிநேகிதர்களாகி இரண்டு மாதங்களுக்கு மேலாகிறது. அது வரை அவனுக்கு ஒரு தங்கை இருப்பதாக அவன் சொன்னதே யில்லை. நாங்கள் இரண்டு பேருமே ஒருவர் பெயரை மற்றவர் அறிந்திருந்ததுடன், வேறு வீட்டு விஷயங்களைப் பற்றி அறிந்துகொள்ள முயலவில்லை.

ஒருவேளை வீடு தவறி வந்துவிட்டோமோ வென்றெண்ணி, "போஸ்டாபீஸில் வேலை பார்க்கும் தேவதாஸ் இங்கேதானே இருக்கிறார்?" என்று தடுமாறிக் கொண்டே கேட்டேன்.

அவள் எனக்குப் பதில் ஒன்றும் கூறாமல், "அண்ணா! உன்னைப் பார்ப்பதற்கு யாரோ

வந்திருக்கிறார்கள்" என்று கூவிக்கொண்டே உள்ளே ஓடினான்.

நானும் உள்ளே சென்றேன்; கூடத்தில் தேவதாஸ் படுத்துக் கொண்டிருந்தான். என்னைக் கண்டதும் எழுந்து உட்கார்ந்து, "ஏது, இவ்வளவு நேரம்?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

"தபால் ஆபீசுக்குப் போயிருந்தேன். உன்னைக் காணவில்லை. என்னமோ, ஏதோ என்று ஓடி வந்தேன்" என்றேன்.

அவன் சமையல் அறைப் பக்கம் பார்த்துக் கொண்டே, "புஷ்பா! கொஞ்சம் சீக்கிரம் ஆகட்டும்" என்றான்.

"என்ன அவசரப் படுத்தறே?" என்று கேட்டேன். அதற்குள் அவள் — தேவதாஸின் தங்கை புஷ்பா—காப்பி கொண்டு வந்தாள்.

"எங்கள் புஷ்பாவின் காப்பி எப்படியிருக்கிறதென்று பார்த்துச் சொல்லு!" என்றான் தேவதாஸ்.

அவள் முகம் சிவக்க, "போ, அண்ணா!" என்று சொல்லிவிட்டு உள்ளே போய் விட்டாள்.

அன்று அவர்கள் வீட்டைவிட்டு வெளியே வரும்போது என் மனம் கூடு விட்டுக் கூடு பாய்ந்து விட்டது. எங்கே சென்றது என்று நான் சொல்ல வேண்டியதில்லை.

அப்போது நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். தனியே அறை எடுத்துக் கொண்டு, ஹோட்டலில் சாப்பிட்டு வந்தேன்.

தேவதாஸ் தபாலாபீஸில் குமாஸ்தா ஆனதிலிருந்து எனக்கு ஒரு சௌகரியம் ஏற்பட்டது. தபால்களுக்காக நான் அதிக நேரம் காத்திருக்க வேண்டியதில்லை. கட்டு உடைத்தவுடனேயே தேவதாஸ் எனக்கு ஏதாவது வந்திருக்கிறதா என்று பார்த்துச் சொல்லி விடுவான்.

எங்கள் சிநேகிதம் வளர்ந்து வந்தது. சாயங்கால வேளைகளில் கல்லூரி விட்டதும் தபால் ஆபீசுக்குப் போவேன். அவனையும் அழைத்துக் கொண்டு உலாவச் செல்வேன்.

நான் அவன் வீட்டிற்குச் சென்றது அதுவே முதல் தடவையாகும். ஆனால் அந்த முதல் தடவையிலேயே.........!

என் அத்தையின் புருஷனை அந்த ஊர் 'போஸ்ட் மாஸ்ட'ராக மாற்றி யிருந்தார்கள். அவரும், அத்தையும், அவர்களுடைய இரண்டு பெண் குழந்தைகளுடன் வந்திருந்தார்கள்.

அவர்களைப் பார்க்கப் போயிருந்தேன். க்ஷேமலாபங்கள் எல்லாம் விசாரித்தான பிறகு அத்தை, "ஏண்டா! யாராவது 'டியூஷன்' வாத்தியாரைப் பாரேன். நம்ப பேபிக்கும், கமலாவுக்கும் சொல்லித் தர வேணும்" என்றாள்.

என் மனதில் ஒரு ஆசை உண்டாயிற்று. என் தந்தை எனக்கனுப்பி வந்த பணம் போதும் போதாமலிருந்தது. அதற்காக இரண்டு டியூஷன்கள் வைத்துக் கொண்டிருந்தேன். இந்த டியூஷனையும் நானே எடுத்துக் கொண்டால் நல்லதுதானே என்று எண்ணினேன். "மருமகன் தானே!" என்று பணம் தராமலிருந்து விட்டால் என்ன செய்வது என்ற யோசனையும் உண்டாயிற்று. "அதற்கென்ன, அத்தை!" என்று அப்போது பதில் சொல்லிவிட்டு வந்தேன்.

சிறிது ஆலோசித்த பிறகு ஒரு முடிவுக்கு வந்தேன். அதன்படியே இரண்டு வாரங்களுக்குப் பிறகு சென்றேன்.

"உன்னிடம் சொல்வதை விட ஒரு குட்டிச் சுவரிடம் சொல்லலாம். நீ வாத்தியார் பார்த்தது போதும். அவர்களுக்கு வாத்தியார் கிடைத்தாய் விட்டது!" என்று கூறியவாறே என்னை வரவேற்றாள் என் அத்தை.

"உனக்கு — இருந்தாலும் — ரொம்ப அவசரம், அத்தை!" என்று கூறிவிட்டுத் திரும்பி வந்தேன்.



புஷ்பாவுக்கு வயது பதினெட்டு இருக்கலாம். 'தேவதாஸ் இருக்க மாட்டான்' என்று நிச்சயமாகத் தெரிந்திருந்தபோதும் அவனைத் தேடிச் செல்வேன். அவளும் கொஞ்சம் கொஞ்சமாகத் தைரியமடைந்து வந்தாள். அவளுக்குத் தைரியம் அதிகரிக்க அதிகரிக்க, என் கண்களுக்கு அவளுடைய அழகு அதிகரித்துக் கொண்டே வந்தது.

ஒரு நாள் தேவதாஸிடம் அவர்களுடைய வீட்டு விஷயமாகப் பேச ஆரம்பித்தேன். அவ்விருவரையும் விட்டுவிட்டு அவர்களுடைய பெற்றோர் பரகதி அடைந்த விஷயத்தையும், புஷ்பாவை 'யாராவது ஒருவனுக்கு'க் கல்யாணம் செய்து கொடுக்கும் பொறுப்பு தன்னுடையது என்பதைப் பற்றியும் சொன்னான். அதோடு, புஷ்பா எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் செய்துவிட்டுச் சும்மா உட்கார்ந்திருக்க விரும்பவில்லையென்றும் ஏதாவது நல்ல குடும்பங்களில் டியூஷன் சொல்லிக் கொடுக்க விரும்புகிறாள் என்றும் சொன்னான்.

* * *

புஷ்பாவுக்குப் பிறந்த நாள் வந்தது—வருவதாக இருந்தது. அன்று அவளுக்கு என்ன பரிசு அளிப்பது என்று தீவிரமாகச் சிந்தனை செய்தேன். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தபோது என் வாய், "சபாஷ்! நல்ல யோசனை! ஒரு கல்லில் இரண்டு மாங்காய்!" என்று முணுமுணுத்துக் கொண்டது.

மேற்படி முடிவுக்கு வந்தவுடனேயே என் அத்தையின் வீட்டிற்குச் சென்றேன். சற்று நேரம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்துவிட்டு, "டியூஷனுக்கு என்ன சம்பளம் தருகிறாய் அத்தை?" என்று கேட்டேன்.

"ஏன்? பத்து ரூபாய் தருகிறேன். குழந்தைகளுக்கும் வாத்தியாரை ரொம்பப் பிடித்திருக்கு" என்றாள்.

"ஹூம்! இந்தப் பஞ்சகாலத்தில் பத்து ரூபாய் கொடுத்துக் கட்டுப்படியாகிறதா?" என்று சொல்லி, வேறு திசையை நோக்கினேன். என் வலையில் அத்தை சிக்க ரொம்ப நேரமாகாது என்று எனக்குத் தெரியும்.

"அதிகம்தான்; இருந்தாலும், இந்தக் காலத்தில் அதற்குக் குறைந்து யார் வருகிறார்கள்?" என்றாள்.

"இதுதானா பிரமாதம்? எனக்குத் தெரிந்த ஒரு வாத்தியார் இருக்கிறார். ஐந்து அல்லது ஆறு ரூபாய்க்கே 'டியூஷன்' ஒப்புக் கொள்ளுவார்" என்றேன்.

அத்தை சற்று யோசித்தாள். "சரி; நீ நாளைக் கழித்து வா. நான் தீர்மானமாய்ச் சொல்லி விடுகிறேன். ஐந்து நாட்களில் முதல் தேதியும் வந்து விடுகிறது" என்றாள்.

"என் யுக்தி பலித்தது" என்று குதூகலத்துடன் திரும்பிச் சென்றேன்.

*

"எப்படியாவது புஷ்பாவை இந்தப் பரிசை ஏற்கும்படிச் செய்ய வேண்டும். எஸ். எஸ். எல். ஸி. படித்தவளுக்குச் சிறு பெண்களுக்குச் சொல்லித் தருவது கஷ்டமாயிராது. மேலும் அண்ணனுக்குப் போஸ்டாபீஸில் வேலை; தங்கைக்குப் போஸ்ட் மாஸ்டர் வீட்டில் வேலை என்றால் சௌகரியந்தானே? ... சம்பளத்தைப் பற்றிப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் ...... எப்படியும் இந்த 'டியூஷ'னை புஷ்பா ஏற்றுக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும்" என்று முடிவு செய்தேன்.

"பிறந்த நாள் முதல் தேதிக்கு முந்தின நாள் வருகிறது. அதுவரை தலை காட்டாமல் இருந்துவிட்டு, எதிர்பாராத விதமாக இச் செய்தியைச் சொல்ல வேண்டும். இருவரும் அப்படியே பிரமித்துப் போக வேண்டும்" என்றும் எண்ணமிட்டேன்.

* * *

பிறந்த நாளுக்கு முந்தின தினம். அதற்கு மேல் எனக்குப் பொறுக்கவில்லை. தேவதாஸின் வீட்டை யடைந்தேன். வெளிக் கதவு லேசாகச் சாத்தியிருந்தது.

சற்று நேரம் வெளியே நின்று உள்ளே என்ன நடக்கிறது என்று ஒட்டுக் கேட்டேன். அடடா! விம்மும் சத்தம் அல்லவா கேட்கிறது! புஷ்பா ஏன் அழுகிறாள்? நாளைக்குப் பிறந்த நாள். இன்று இப்படி இருக்கிறதே! தேவதாஸ் ஏன் படபடக்கிறான்?

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தேன். என் வரவைக் கண்டு புஷ்பா உள்ளே போய் விட்டாள். ஆயினும் விம்மும் சத்தம் மட்டும் நிற்கவில்லை.

நான் தேவதாஸை விசாரித்தேன். அவனும் முகம் கொடுத்துப் பேசவில்லை. "அந்த வயிற்றெரிச்சலைக் கேட்காதே! உன் மனசு வருத்தப்படும்" என்றான்.

"நீங்கள் வருத்தப்படும்போது நான் மட்டும் சந்தோஷமாக இருக்கவா?" என்று நான் கடிந்து கொண்ட பிறகு சொன்னான். "எனக்கென்ன? பின்னால் நீதான் வருத்

தப்படுவாய்...... உன் அத்திம்பேர் சுத்த லோபியாக இருக்கிறார். அவர் சம்சாரம் அதற்கு மேலே. புஷ்பா அவர்கள் வீட்டுக் குழந்தைகளுக்கு 'டியூஷன்' சொல்லிக் கொண்டிருந்தாள். இன்று கூப்பிட்டு, 'சம்பளம் இவ்வளவு கொடுத்துக் கட்டுபடியாகாது' என்று கூறி நிறுத்தி விட்டார்களாம். பத்து ரூபாயில் இவர்கள் மாளிகையா கட்டிவிடப் போகிறார்கள்?" என்று சாமாரியாகப் பொழிந்தாள்.

கீழே விழாமலிருப்பதற்கு அருகிலிருந்த தூணைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன். அதற்குள் புஷ்பா அங்கே வந்து, "அத்துடன் இல்லே, பக்கத்து வீட்டிலேயும் சொல்லிக் கொண்டிருக்கேன். இவர்களைப் பார்த்து அவர்களும் நிறுத்தி விட்டார்கள். இருபத்தி ஐந்து ரூபாய் சும்மாவா வருகிறது? குழந்தைகளுக்கும் என்னிடம் உயிர். கொஞ்சமாவது இரக்கம் இருந்தால் தானே! கடைசியில் பணம்தானே பெரிதாய்ப் போய் விட்டது!" என்றாள்.

என் மன வருத்தம் சொல்ல முடியாததாயிற்று. என் அத்தையைப் போன்ற பிரோபகாரச் சிந்தை யுடையவளைக் காண முடியாது. என் அத்திம்பேரோ 'அவருண்டு, அவர் ஆபீஸ் உண்டு' என்று வீட்டு வழிக்கே வராதவர். அவர்களுக்கும், இவர்களுக்கும் என்னாலல்லவா மனஸ்தாபம் ஏற்படும்படி நேரிட்டது. என்ன துரதிருஷ்டம்!

ஆனாலும், நான் மனம் கலங்கவில்லை. இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்தேன்.

"இதோ பாருங்கள், இந்த விஷயத்தில் நன்மையைச் செய்யவேண்டியது என் பொறுப்பு. நீங்கள் கவலைப்படாமலிருங்கள்!" என்று கூறிவிட்டுக் கிளம்பினேன்.

நேராக என் அத்தையின் வீட்டுக்குப் போய், "அத்தை! ஒரு புது டியூஷன் வாத்தியாரை நியமித்திருந்தேன் அல்லவா? அவர் இன்று ஊருக்குப் போய்விட்டாராம். எப்பொழுது வருவார் என்றே தெரியவில்லை. குடியிருந்த அறையையும் காலி செய்து கொண்டு போய்விட்டார். உனக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை!" என்று மெதுவாகச் சொல்லி முடித்தேன்.

"எனக்கு அப்பொழுதே தெரியும், நீ இந்தமாதிரி ஏதாவது சொல்வாயென்று. ...தெரிந்தும் குட்டிச் சுவரில் மோதிக் கொண்டேனே! ... இப்பொழுது அந்தப் பெண்ணை எந்த முகத்துடன் கூப்பிட முடியும்? உன் பேச்சைக் கேட்டுக்கொண்டு புஷ்பாவை நிறுத்தி விட்டேனே!" என்று கைகளைப் பிசைந்து கொண்டாள்.

"அத்தை! எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. பேசாமல் சம்பளத்தைச் சற்று அதிகப் படுத்தினால் தன்னாலேயே திரும்பி வந்து விடுவாள்!" என்றேன்.

"நான் செய்த வெட்கக் கேடான காரியத்திற்கு அதுதான் நல்ல மரியாதை!" என்று சொன்னாள் அத்தை.

'தப்பியது தம்பிரான் புண்ணியம்' என்று வீட்டுக்குப் புறப்பட்டேன்.

அன்று பிறந்த நாள்! காலையில் எழுந்தவுடனேயே தேவதாஸின் வீட்டிற்குச் சென்றேன். இருவரும் மலர்ந்த முகங்களுடன் என்னை வரவேற்றனர்.

"போன வேலை ஜயம். அதிகச் சம்பளத்துடன் திரும்பி வந்தேன்" என்று அவன் கைகளைப் பிடித்துக் குலுக்கினேன். இருவரும் விஷயம் புரியாது திகைத்தனர்.

பிறகு, நான் எப்படி அத்தை அத்திம்பேருடன் சண்டை போட்டு, என் காரியத்தைச் சாதித்தேன் என்பதை விஸ்தாரமாகச் சொல்லி, 'அப்பாடா!' என்று ஆசுவாசத்துடன் நாற்காலியில் சாய்ந்தேன். புஷ்பா நன்றியறிதலைக் காட்டும் கண்களுடன் என்னை நோக்கினாள். "இவ்வளவு சூரப்புலியா நீ?" என்றான் தேவதாஸ் சிரித்துக் கொண்டே.

"எதற்கும் இந்த விஷயத்தை நீங்கள் இந்நாள் வரை மறைத்து வைத்திருந்தது பிசகு. எனக்கு ஆபத்தாக அல்லவா போய் விட்டது!" என்றேன்.

சற்று நேரம் சென்றபின், "ஆமாம்; நான் பிறந்த நாள் பரிசு கொடுத்ததற்கு எனக்கு என்ன பதில் மரியாதை கொடுக்கப் போகிறாய்?" என்று கேட்டேன்.

உடனே தேவதாஸ், "இதைக் கொடுக்கப் போகிறேன்!" என்று கூறி, அங்கே நின்றிருந்த புஷ்பாவின் கரங்களைப் பற்றி என் கரங்களுடன் இணைத்தான்.

# வான சஞ்சாரம்

இசைத்தேனி

திருச்சியில் 13வ. நடந்த டி. எம். தியாகராஜனின் முழு நேரக் கச்சேரி சென்ற வாரத்திய முதல் தரக் கச்சேரிகளில் ஒன்று. தொண்டை சிறிது கட்டி யிருந்தபோதிலும், 'இனியாகிலும்' உருப்படியும் நிரவல் ஸ்வரங்களும் அவரது ஞான பாவத்தை நன்கு விளக்கின. ராகமாலிகை சுகமா யிருந்தது. இப்படிப்பட்ட வித்வான் இன்னும் சில கிருதிகளுக்கு அவைகளின் ராகங்களின் ஆலாபனை செய்திருக்கலாம்.

15வ. சென்னையில் தண்டபாணி தேசிகருக்குப் பதிலாக டி. கே. பட்டம்மாள் பாடினார். கச்சேரியில் அவருக்கு இயல்பான நிதானமும் ஒழுங்கும் தென்பட்டன. கரஹரப்ரியாவும் தோடியும் விசேஷ வனப்புடன் விளங்கின. 'எந்த நேர்ச்சினு' கிருதியில் நிரவல் ஸ்வரங்களும் தரமா யிருந்தன.

16வ. சென்னையில் பிற்பகலில் ஒரு மணி நேரக் கச்சேரி செய்த எம். டி. பார்த்தசாரதிக்கு ஆதாரமான பாணி சாரீரம். எவ்வளவு அடக்கினாலும் கனம் குறையாதது. ஆனால் சிறந்த ஞானமும், நல்வழியும் கொண்டிருப்பதால் அவர் சங்கீதம் சக்தி வாய்ந்தது. எளிதில் உணர்ச்சியை யெழுப்பக் கூடியது. கல்யாணியில் அமைந்த ஸ்வர சாஹித்ய கிருதி அவர் கச்சேரிக்கு விசேஷம்.

17வ. திருச்சியில் டி. கே. ரங்காச்சாரியின் முழுநேரக் கச்சேரி உயர்ந்த ரகமாயிருந்தது. ஜன ரஞ்சனியும் சுத்தசீமந்தனியும் சுருக்கமாயினும் அழகு வாய்ந்திருந்தன. பைரவியும் தோடியும் விஸ்தாரமாய்ப் பாடினார். 'யாரோ இவர் யாரோ', 'ஏமி ஜேஸிதே நேமி' உருப்படிகளில் ஞானச் சிறப்பை விளக்கினார்.

• • •

சென்னையில் 11வ. ஜி. சென்னம்மா, திருச்சியில் எம். என். மோகனாம்பாள் இவர்களின் கானங்கள் குளிர்ச்சியா யிருந்தன. முன்னவரது ஆனந்த பைரவியும் அடாணாவும், பின்னவரது ஷண்முகப்ரியாவும் காம்போதியும் தேர்ச்சியா யிருந்தன.

12வ. சென்னையில் சுசீலா அச்சுதராமனின் கானத்தைக் கேட்டவர்கள் அதன் அசாதாரண நாணயத்தைக் கவனித்திருப்பார்கள். பந்துவராளி, கல்யாணி ராகங்களும் அவைகளின் கிருதிகளும் ரஸிகரமா யிருந்தன.

அன்று சென்னையில் கே. பழனிசாமி ஒருவர் மிருதுவான குரலில் வெகு நயமான வழியுடன் வழங்கிய கரஹரப்ரியா, பிலஹரி ராகங்களும், தமிழ் உருப்படிகளும் உருக்கமா யிருந்தன.

14வ. சென்னையில் வீணை வாசித்த எஸ். வித்யாவுக்கு, நிதானமும், கமக இழைப்பும் கொண்ட பிரத்யேக வழி. பைரவியும், சாரங்காவும் வனப்பு வடிவங்களா யிழைந்தன. கடைசியில் கேட்ட மோஹகர்த்தா ராகமாலிகை அவ்வளவாகச் சோபிக்க வில்லை. மொத்தத்தில் அன்று அவர் கமகப் பொழிவிலும் ராகபாவத்திலும் காட்டிய அதிக ஆர்வத்தில், கச்சிதமான லயப் பிடிப்பிலும் போதியவாறு கவனம் செலுத்தவில்லை.

அன்று திருச்சியில் காலைக் கச்சேரியில் எம். எஸ். ஷண்முகசுந்தரம், திருக்கோடிகாவல் கோவிந்தராஜப் பிள்ளை இவர்களின் கச்சேரிகளும் கவனத்தை யிழுத்தன. முதல்வரது தோடி, ஆரபி ராகங்களும், ராகபாவம் நிறைந்த 'தண்டமிட்டேன்' உருப்படியும் தரமா யிருந்தன. இரண்டாமவருக்கு ரஞ்சகமான சாரீரத்துடன் சுகமான வழி. பந்துவராளியும் ராகமாலிகையும் உருக்கமா யிருந்தன.

15வ. சென்னையில் ஆரணி வி. சாரதாம்பாளின் ஆபோகி, பிலஹரி ராகங்கள் தேர்ச்சியா யிருந்தன.

16வ. திருச்சியில், மதுரமும் ஜீவனும் கொண்ட குரலில் பாவம் நிறைந்த வழியுடன் ஒரு கானம் கேட்டது. பாடியவர் எச். எம். மாரியப்பா. கேதாரகௌளை, காபி ராகங்கள் வனப்பு மிகுந்திருந்தன. பாடியதெல்லாம் சாஹித்யத் தெளிவும், உணர்ச்சியும் கொண்ட தமிழ் உருப்படிகள்.

அன்று சென்னையில் வைதேஹி விஜயராகவன் நவரஸகன்னடா, கரஹரப்ரியா ராகங்களையும் உருப்படிகளையும் தைரியத்துடன் அநாயாசமாய்ப் பாடினார்.



★

## தப்பான எண்ணம்!

ஒருவர் :— ஸார்! உங்கள் கம்பெனியில் ஏதோ ஆள் எடுப்பதாகக் கேள்விப்பட்டேன். என்னைக் கொஞ்சம் சிபாரிசு செய்தால் தேவலை.

மற்றவர் :—ஸார்! நீங்க தப்பா நினைச்சுட்டீங்க! இருக்கிற ஆட்களையேதான் அவர்கள் வேலையி லிருந்து எடுத்து வருகிறார்கள். இதோ பாருங்கள், எனக்கு வந்திருக்கும் நோட்டீஸை!

—என். கிருஷ்ணன்.

★

# கோதாவரிக் குண்டு

லக்ஷ்மி



"இதேதடா இது, சண்டை ஒரு பாடாக ஓய்ந்தும் இந்தக் குண்டு சமாசாரம் மட்டும் ஓயமாட்டேன் என்கிறதே, சட்!" என்று முகத்தைச் சுளித்துப் பக்கங்களை மேலே புரட்டிக் கொண்டு போகாதீர்கள்! இது வெறும் சோற்றுக் குண்டு; கோதாவரி வெண்கலப் பானை!

இந்தக் குண்டு என்னவோ காசவேலை செய்யத்தான் செய்தது. இத்தனை காலும் கூடப் பிறந்த தமக்கை தங்கைகளைப் போலப் பிரியத்துடன் பழகி வந்த சாரதாவுக்கும், அவள் மதனி மீனுவுக்கு மிடையே, கேவலம் இந்த காலு ரூபாய் பெருத வெண்கலப் பானை பேச்சு வார்த்தை கூட இல்லாமல் மனஸ்தாபத்தை உண்டு பண்ணி விட்டது.

மீனு, கல்யாணமாகிப் புருஷனுடன் தனிக் குடித்தனம் பண்ண ஆரம்பித்த புதிதில், அவள் அத்தை, அருமை மருமாளுக்கென்று கால் படி அரிசி வடிக்கக்கூடிய அந்த அழகிய சிறு வெண்கலப் பானையை வாங்கி வந்து கொடுத்தாள். அத்தை இறந்து போய் இப்போது ஆறு மாதம்தான் ஆகியிருந்தது. இந்தக் கோதாவரி குண்டைப் பார்க்கும் போதெல்லாம் மீனுவுக்கு அத்தையின் நினைவு பொங்கிக்கொண்டு வரும். வெண்கலப் பானையை வேலைக்காரியிடம் தேய்க்கப் போடக்கூட மனம் வாராமல், ரோஜா இதழ்போன்ற மிருதுவான தன் கரங்களாலேயே அதைப் பளபளவென்று

யாத மோகம் உண்டாகிவிட்டது; அற்ப மானுலும், பெண்களுக்குத்தான் ஒரு பொருளின் மீது ஆசை விழுந்துவிட்டால் அதை உடனே அடைந்தாக வேண்டுமே!

ராமச்சந்திரனுக்கு விவாகமான பிறகு, முதல் தடவையாகச் சாரதா, தன் நாலு வயதுப் பிள்ளை ரமணியுடன் தமையன் வீட்டுக்கு வந்திருந்தாள். இதற்கு முன் ராமச்சந்திரன் தன் மனைவி மீனுவுடன் இரண்டு மாதகாலம் கடலூரில் இருந்த தன் தங்கையிடம் போயிருந்தான். அப்பொழுது காந்தனுக்கும் மதனிக்கும் பரஸ்பரம் ஏற்பட்ட ஸ்நேகிதத்தையும், ஒற்றுமையையும் கண்டு ராமுவே பிரமித்துப் போனான்!



காந்தனூர் தன் வீட்டுக்கு எப்போது வருவான் என்று ஏங்கிக் கிடந்தாள் மீனு. அவன் வந்த பிறகு மீனுவுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்லவும் வேண்டுமா? மீனு, குழந்தை ரமணியைத் தூக்கித் தூக்கி முத்தமிட்டுக் கொஞ்சி விளையாடினாள்; காந்தனூருக்கு விழுந்து விழுந்து உபசாரம் பண்ணினாள். தன் மனைவிக்கு ஏற்பட்ட ஆனந்தத்தைக் கண்டு ராமு ஆச்சரியப்பட்டான்.

✶

அன்று ஞாயிற்றுக் கிழமை. பகல் நாலு மணிக்கு எல்லோரும் காப்பி, டிபன் சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது, ராமு தன் தங்கையிடம், "சாரதா, இன்றைக்கு ராத்திரி எங்கள் கிளப் செக்ரடரிக்குப் பிரிவுபசார விருந்து. நல்ல டின்னருக்கு ஏற்பாடு பண்ணியிருக்கிறோம். எனக்குக் காத்திராமல், ராத்திரி நீங்கள் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

அவன் சென்ற பிறகு சாரதா மீனுவுக்குத் தலை பின்னிக்கொண்டே, "ராத்திரி சாதத்தை மட்டாக வடி!" என்றாள். மீனு உடனே அலமாரியைத் திறந்து கோதாவரிக் குண்டை எடுத்தாள். காந்தனூர் வருவதற்கு முன், தனக்கும் அகமுடையானுக்கும் ராத்திரிக்குச் சாதம் அதில்தான் வடிப்பது வழக்கம். அவன் வந்த பிறகு இன்று தான் முதல் தடவையாக அதை வெளியில் எடுத்தாள் மீனு.

சாரதா வெண்கலப் பானையைப் பார்த்ததும் கண்களை அகல விரித்து, "அடியம்மா! எத்தனை அழகாயிருக்குடி? எனக்கு இதைக் கொடுத்துட்டு நீ வேறே ஒண்ணு வாங்கிக் கோயேண்டி" என்றாள்.

மீனுவின் முகம் வாடிவிட்டது. காந்தனூருக்குக் கொடுக்க மாட்டேன் என்று சொல்லவும் தைரியமில்லை, கொடுக்கவும் மனம் வரவில்லை. நிலைமையைச் சமாளிக்க வேண்டித் தயங்கின குரலில், "இது எனக்கு அத்தை கொடுத்தது. இதே மாதிரி ஒண்ணு வாங்கி அனுப்பச் சொல்லி, நாளைக்கே அத்தைக்கு ஒரு கடிதாசி போடறேன், அக்கா! நீங்கள் ஊருக்குப் போறதுக்குள்ளே அவசியம் வாங்கி அனுப்பிச்சுடுவார்" என்றாள்.

சாரதா 'காந்தனூர்' வர்க்கத்தைச் சேர்ந்தவள்தானே? ஆகவே "துணியுண்டு பெண்! காந்தனூர் வாயைத் திறந்து கேட்கிறாளே என்றுகூட இல்லாமல், என்னமோ வாங்கித் தரேன்னு மழுப்பறாளே!" என்று உள்ளூற ஆத்திர மடைந்தாள்.

✶

இந்த மனஸ்தாபம் காரணமாக இரவு இருவரும் சரியாய்ச் சாப்பிடாமல், அந்தப்

பாழாய்ப்போன வெண்கலப் பானையில் வடித்த சாதம் பாதிக்குமேல் மிஞ்சிவிட்டது.

மறு நாள் காலை வெண்கலப் பானையைத் தேய்த்து அலம்பி, அதைக் கூடத்து அலமாரியில் வைக்கப்போன மீனு, சட்டென்று என்னவோ எண்ணியவளாய், சமையலறைக்கே திருப்பி எடுத்துச் சென்றாள்.

தினசரி மாமியையே வலம் வந்து கொண்டிருந்த ரமணி, இவர்கள் இருவரும் அரட்டை அடிக்காமல் மூலைக்கு ஒருவர் முகத்தைத் தூக்கிய வண்ணம் ஒவ்வொரு புஸ்தகத்தை வைத்துக் கொண்டு படிப்பது போல் பாசாங்கு பண்ணுவதைக் கண்டு, "அம்மாவோடே நீ 'டூ'வா? அப்படின்னா நானும் 'டூ' விட்டுடறேன்" என்று மீனுவிடம் சொன்னது இருவரையும் சற்றுக் கலக்கிற்று. ஆனால் சமாதானம் பண்ணிக் கொள்ள முன் வரவில்லை.

அன்று மத்தியானம் மீனு தலையில் தடவிக் கொள்வதற்குத் தைலத்தை எடுப்பதற்காக அலமாரியைத் திறந்தபோது, ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த சாரதா வெண்கலப் பானை வழக்கமான இடத்தில் இல்லாதது கண்டு முகத்தைச் சுளித்துத் தோள் பட்டையில் இடித்துக் கொண்டாள். இதைக் கண்ட மீனுவுக்கு மார்பு 'படக் படக்' என்று அடித்துக்கொள்ள, புட்டியை எடுத்துக் கொண்டு 'விர்'ரென்று சென்றாள்.

செவ்வாய், புதன் இரண்டு நாளும் இதே நிலைமை நீடித்திருந்தது. புதன்கிழமை காலை சாரதா ராமுவிடம் தான் அன்று மத்தியானம் தன் ஓர்ப்படி யகத்துக்குப் போய் வருவதாகவும், அவர்கள் வீட்டுக் குழந்தைக்கு அம்மையாய் இருப்பதால், ரமணியை விட்டுச் செல்வதாயும் சொன்னாள்.

மீனு தனிமையில் கணவனிடம், "சபேசய்யராத்துக் கலியாணத்துக்கு நகை, வெள்ளிப் பாத்திரம் வாங்க அவாளோடு மத்தியானம் கடைக்கு நானும் வருவதாகச் சொல்லி யிருக்கிறேனே? ரமணியை யார் பார்த்துக் கொள்ளுவது?" என்றாள்.

ராமு, தான் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி மூன்று மணிக்கே ஆபீஸிலிருந்து வந்து விடுவதாகச் சொன்னான்.

இரண்டு மணிக்கே சாரதா வீட்டை விட்டுக் கிளம்பிப் போனாள். அகமுடையான் வந்ததும் மீனுவும் புறப்பட்டுப் போனாள்.

சாரதா வீடு திரும்பினபோது வீடு பூட்டப்பட்டிருந்தது. எதிர் வீட்டில் விசாரித்ததில் ராமு குழந்தையுடன் பீச்சுக்குப் போயிருப்பதாகச் சொல்லிச் சாவியைக் கொண்டுவந்து கொடுத்தார்கள்.

சாரதா வீட்டைத் திறந்து, ராத்திரிக்கு வேண்டிய சமையல் வேலையைச் செய்யலாம் என்று எண்ணி நேரே சமையலறைக்குச் சென்று 'ஸ்விச்'சைப் போட்டாள். முதல் முதலில் கண்ணில் பட்டது கோதாவரிக் குண்டு! அவள் கைகள் தாமாக அதை எடுக்க, அதில் ஒரு விரிசலும், விளிம்பில் ஒரு உடைசலும் ஏற்பட்டிருப்பதைக் கண்டு அவள் முகத்தில் அசாத்திய ஆச்சரியம் ஏற்பட்டது. "இதைக் கொடுக்க வெகு பிகு பண்ணிக்கொண்டு, இங்கே கொண்டு வந்து பதுக்கிறாளே, எந்தப் பூனை தள்ளி உடைச்சதோ? வேணும் அவளுக்கு!" என்று எண்ணியதும், அவளுக்குச் சிரிப்பு வந்தது. வெண்கலப் பானையை எடுத்த இடத்திலேயே வைத்து விட்டாள்.

இவ்வளவு நேரமும் இந்தச் சமையலறை நாடகத்தைக் கவனித்தவாறு மீனு, கூடத்து இருட்டில் சிலை போல நின்றுகொண்டிருந்தாள். நாத்தனார் பேரில் அவளுக்கு இருந்த மதிப்பெல்லாம் அந்த ஒரு க்ஷணத்தில் தீராத வெறுப்பாக மாறிற்று. "ஆகா! நான் இல்லாத சமயம் பார்த்து அதைக் கீழே தள்ளி உடைத்து விட்டுச் சந்தோஷப்பட்டுக் குதிப்பதைப் பார்! சீ, இவளும் ஒரு ஜன்மமா!" என்று எண்ணினாள்.

சமையலறையிலிருந்து வெளியே வந்த சாரதா யாரோ நிற்பது கண்டு, இருட்டில் தெளிவாக இன்னார் என்று விளங்காமல் சற்றுப் பயந்த குரலில், "யாரது மீனுவா?" என்று கேட்டாள்.

அவள் குரல் மீனுவின் சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்தது. "நான்தான்" என்றாள் மிடுக்காக.

சாரதா சற்றுத் தெளிந்து, "மீனுவா? எத்தனை நாழிகையாக இப்படி நிக்கறே? சந்தடி செய்யாமே இப்படித்தான் வந்து பயமுறுத்துவாளோ?" என்றாள்.

நாத்தனாரை முறைத்துப் பார்த்து, மீனு அங்கிருந்து அகன்றாள்.

அன்றிரவு ராமு சாப்பிடும்போது, சாரதா அவனிடம், "அண்ணா, நான் நாளைக்கே ஊருக்குப் புறப்பட்டாகணும்" என்றாள்.

"என்ன அவசரம்? வந்து ஒரு வாரம் கூட ஆகவில்லை, அதுக்குள்ளே அகத்துக்காரரை நினைச்சுண்டு துடிக்கிறயோ?"

"இல்லை, அண்ணா! அவரிடமிருந்து இன்னிக்குக் கடிதாசி வந்திருக்கு. ரமணியை விட்டு அவராலே ரொம்ப நாள் பிரிந்திருக்க

முடியாது. அவளைத் தனியே விட்டுவிட்டு எத்தனை நாள் நான் மட்டும் இங்கே உட்கார்ந்திருக்கிறது? அவளும் ஊருக்குப் புறப்பட்டாகணும்."

"சரி, சரி. எனக்காகச் சொல்லவில்லை; உன் மதனிக்குச் சம்மதம் என்றால் தாராளமாய்ப் புறப்பட்டுப் போ!"

சாரதா, வெகு அர்த்த புஷ்டியுடன், மீனுவை ஒரு பார்வை பார்த்தாள்.

மறுநாள் ரமணியுடன் சாரதா ஊருக்குப் புறப்பட்டுப் போனாள்.

★

வருஷம் இரண்டாயிற்று. சாரதா முன்போல மீனுவுக்குப் பக்கம் பக்கமாக வரிந்து தள்ளிக் கடிதம் எழுதுவதில்லை. இவளும் அவளுக்கு எழுதுவது கிடையாது. ராமு எப்பொழுதாவது கேட்டு வைத்தால் ஏதாவது சொல்லி மழுப்புவாள். ராமுவின் மூலமாக மீனு நாத்தனாரை ரொம்பவும் விசாரித்ததாகவும், சாரதா மீனுவை விசாரித்ததாகவும் கடிதப் போக்குவரத்து நடக்கும்.

மீனுவுக்கு இது ஏழாவது மாதம். வேறு சௌகரியமான வீட்டுக்குக் குடித்தனம் போக வீட்டை ஒழித்துக் கொண்டிருக்கும் போது, ராமு பாத்திரப் பெட்டியைத் திறந்து அதிலிருந்தவைகளை வெளியில் எடுத்து வைத்தான். உடைந்து போன கோதாவரிக் குண்டு வெளிப்பட்டது. ராமு சிரித்துக் கொண்டே, "மீனு, இதை உடைச்சது யார் என்று உனக்கு இன்று வரைக்கும் தெரியாது!" என்றான்.

மீனு பதில் ஒன்றும் பேசாததைக் கண்டு, "பூனை தள்ளி உடைச்சிருக்கும் என்று தானே நினைத்துக் கொண்டிருக்கிறாய்?" என்றான் மேலும்.

"போங்கோ, இரண்டு கால் பூனை தள்ளி உடைச்சதாக்கும்?"

"உனக்கு ஜோஸ்யம் கூடத் தெரியுமோ? எப்படித் தெரிந்தது, சொல்!" என்றான்.

மீனு முகம் சிவந்து, "நேரே என் கண்ணாலேயே பார்த்தேனே! எப்படித் தெரியாமல் போகும்?" என்றாள்.

ராமு வெகு ஆச்சரியத்துடன், "நான் அதைக் கீழே தள்ளி உடைச்சபோது, சாரதாவும் நீயும் வெளியே போயிருந்தீர்களே? ரமணிப் பயல் என்னைக் காட்டிக் கொடுத்துட்டானோ? வெகு துஷ்டன் அவன்!" என்றான்.

மீனுவின் முகத்தில் சொல்லொணாத வேதனை தென்பட்டது. "ஐயோ! நீங்களா அதை உடைச்சது?" என்றாள்.

ராமு அவளுக்கு ஏற்பட்ட பரபரப்பைக் கண்டு பயந்து, "இதைப் பிரமாதப் படுத்துகிறாயே, மீனு? அன்று நான் ரமணியைக் கூட்டிக்கொண்டு பீச்சுக்குக் கிளம்பின போது, அவன் 'சமையலறைப் பரண் மேலே பந்தை விட்டெறிஞ்சேன். அதை எடுத்துத் தா, பீச்சுக்குப் போய் விளையாடணும்!' என்றான். பரண் கைக்கு எட்டாததால், கம்பை எடுத்துத் துளாவினபோது வெண்கலப் பானை தொட்டி முற்றத்தில் 'டணார்' என்று உருண்டு விழுந்தது. அதை அப்படியே மேடைமேல் வைத்துவிட்டுப் போனேன். விஷயத்தை நீயே பிரஸ்தாபிக்காததால், நானும் இத்தனை நாள் சும்மா இருந்தேன்!" என்று சொல்லி முடித்தான்.

மீனு பெருமூச்சு விட்டு, "இந்தச் சனியனைப் பழைய பாத்திரக் கடைக்காரனுக்குப் போட்டு விடுங்கள்!" என்று சொல்லி அதை எடுத்துத் தூர வைத்தாள்.

அந்தக் கோதாவரிக் குண்டு உருண்டு போய் ஒரு மூலையில் விழுந்தது.



உபாத்தியாயர்:—டேய் பயல்களா? ஸ்கூல் எதிரிலேயே கோலி ஆடற அளவுக்குத் தைரியம் வந்துடுத்தா உங்களுக்கு?

ஒரு பையன்:—இல்லை ஸார்; வீட்டுக் கிட்டயே விளையாடிண்டு இருந்தால் நேரம் போறது தெரியாமல் மணி அடிச்சவுடனே பள்ளிக்கூடம் வர முடியறதில்லை; அதனால்தான் இங்கேயே விளையாடுகிறோம்.



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 146. வந்துவிட்டது வில்!

கரனுடைய தேர் எதிரே வருவதைப் பார்த்ததும் ராமன், தேர்ந்தெடுத்த ஒன்பது அம்புகளைக் கரன்மேல் ஏவினன்.

கரன் என்ன செய்தான்? அந்த ஒன்பது அம்புகளையும் தன்னுடைய அம்புகளால் அறுத்தான். அதோடு நிற்கவில்லை அவன். தந்திரமான வேலை செய்து ஒரு சரமாரியால் ராமனது உருவையே மறைத்து விட்டான்.

கள்ள அமர் மாய வினைக்
  கல்வி யின்வி ளைந் தான்.
வள்ளல் உரு வைப்ப கழி
  மாரி யின்ம றைத் தான்:
உள்ளம் உலை வுற்(று)அ மரர்
  ஓடி னர்ஒ ளித் தார்:—
வெள்ள யி(று)இ தழ்ப்பி றழ
  வீர னும்வெ குண் டான்.

[கள்ள அமர் மாய வினைக் கல்வியின் விளைந்தான்: கள்ளத்தனமாகப் போர் செய்வதற்கான மாய வித்தைப் பயிற்சியில் தேர்ந்தவனான கரன்; வள்ளல் உருவை: ராமனது உருவை; பகழி மாரியால் மறைத்தான்: சரமாரியால் மறைந்தது போல் ஒரு வேலை செய்தான்; வெள் எயிறு இதழ்ப் பிறழ: முத்துப் போன்ற பற்கள் உதட்டைக் கடித்த வண்ணமாய்; வீரனும் வெகுண்டான்: ராமனும் கோபம் கொண்டான்.]

அடங்காத கோபம் வந்து விட்டது ராமனுக்கு. "ஒரு கணையினாலே முடித்து விடுகிறேன், இந்த அரக்கனை!" என்று சொல்லி ஒரு கணையைத் தொடுத்து நாணை வலது தோளைப் பொருந்தும்படி பலமாய் இழுத்தான்.

'முடிப்பென் இன்றொரு
  மொய்க்கணை யால்'எனத்
தொடுத்து நின்றுயர்
  தோளுற வாங்கினன்:—
பிடித்த திண்சிலை
  பேர்அகல் வானிடை
இடிப்பின் ஓசை
  படக்கடி(து) இற்றதே.

[முடிப்பென் இன்று ஒரு மொய் கணையால் எனா: "இப்பொழுதே முடித்து விடுகிறேன் இந்த அரக்கனை, ஒரு சரியான அம்பொன்றால்!" என்று சொல்லி; மொய்க்கணை: நன்கு கூர்த் தீட்டி இறுகிய இரும்பால் செய்த கணை; தொடுத்து: அம்பை நாணில் பொருந்த வைத்து; நின்றுயர் தோள் உற வாங்கினன்: பெருமிதத்தோடு விளங்கி நின்ற தோளில் பொருந்தும்படி இழுத்தான்; பிடித்த திண் சிலை: இடது கையில் பிடித்திருந்த வில்லின் தண்டு; பேர் அகல் வானிடை: விசாலம் அகன்ற வானத்தில் உண்டாகும்; இடிப்பின் ஓசைபட: இடியோசையோ என்று சொல்லும்படி; கடிது இற்றதே: க்ஷணத்தில் ஒடிந்து போயிற்று.]

ராமன் சக்கரவர்த்தியின் மகன். எத்தனையோ யுத்தங்கள் செய்திருக்கிறான். அந்த யுத்தங்களில் ராமனுக்குப் பரிவாரங்களும் ஆயுதங்களும் வேண்டியமட்டும் இருக்கும்.

இப்பொழுது ஏதோ பரிவாரமும், வில்லுகளும் பின் பக்கத்தில் தயாராய்

இருப்பதாகவே எண்ணுகிறான் ராமன்—பூர்வ பழக்கம் பற்றி. வில் ஒடிந்ததையும் பக்கத்தில் யாரும் இல்லாததையும் சிந்திக்கவே யில்லை—அத்தகைய வீர வெறியில் இருக்கிறான்.

என்னும் மாத்திரத்(து)
 ஏந்திய கார்முகம்
சின்னம் என்றும்
 தனிமையுஞ் சிந்தியான்,
மன்னர் மன்னவன்
 செம்மல், மரபினால்
பின்னு றத்தன்
 பெருங்கரம் நீட்டினான்.

[என்னும் மாத்திரத்து: வில் ஒடிந்தது என்று சொன்ன மாத்திரத்தில்; ஏந்திய கார்முகம் சின்னம் என்றும்: கையில் ஏந்திய வில் பழுதாய் விட்டது என்பதையும்; தனிமையும் சிந்தியான்: பரிவாரம் ஒன்றும் இல்லாமல் தான் தனி என்பதையும் சிந்தியாமல்; மன்னர் மன்னவன் செம்மல்: சக்கரவர்த்தியின் திருமகன் ராமன்; மரபினால்: பூர்வ பழக்கம் காரணமாக; பின்னுறத் தன் பெருங்கரம் நீட்டினான்: பின்புறமாக இடது கையை நீட்டினான்.]

வில் முறிந்த சத்தம் சீதையின் பக்கத்தில் இருந்த லக்ஷ்மணன் காதில் விழுந்தது. விஷயத்தை உணர்ந்துகொண்டான். அப்படியே ஓடி வந்து அண்ணன் கையில் வேறொரு வில்லைக் கொடுத்து விட்டான்—எல்லாம் ஒரு நொடியில்.

கண்டு நின்று
 கருத்துணர்ந் தானென
அண்டர் நாதன்
 தடக்கையின் அந்துணை,
பண்டு போர்மழு
 வாளிபால் பண்பினிற்
கொண்ட வில்லையே
 தம்பிகொ டுத்தனன்.

[கண்டு நின்று கருத்து உணர்ந்தான் என: மறைவில் சீதையோடிருந்தும், ஏதோ பக்கத்திலேயே நின்று பார்த்து விஷயத்தைத் தெரிந்து கொண்டவன் போல; அண்டர் நாதன் தடக்கையில்: உலகத்துக்கு நாயகனான ராமனது பெரிய கையில்; அந்துணை: அந்த க்ஷணமே; பண்டு: முன்னமே; போர் மழுவாளிபால்: போருக்காக மழு ஏந்திய பரசுராமனிட மிருந்து; பண்பினிற் கொண்ட: யுத்த முறைப்படிக் கைக்கொண்ட; வில்லையே தம்பி கொடுத்தனன்: அந்த வில்லையே லக்ஷ்மணன் ஓடி வந்து கொடுத்து விட்டான்.]

குறிப்பு:—முன்பு பரசுராமன் தன் கையிலுள்ள பெரிய வில்லை ராமனிடம் கொடுத்து, "நாண் ஏற்று, பார்ப்போம்" என்று சொன்னான். ராமன் வெகு அநாயாசமாய் நாணேற்றி விட்டான். பரசுராமன் அப்படியே வில்லை ராமனிடமே கொடுத்து விட்டுப் போய்விட்டான்.

லக்ஷ்மணன் எப்படி ராமன் விஷயத்தில் கண்ணும் கருத்துமாய் இருக்கிறான் என்பதைச் சந்தர்ப்பம் விளக்குகிறது. பாத்திரத்தை அபூர்வமான முறையில் விளக்குகிறார் கவிஞர்.

○ ★ ○

## புதுச்சேரியில் பாரதி மண்டபம்

மகாகவி பாரதியார் தமது ஞாபகார்த்த காரியங்களை ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு விதமாக நடத்திக்கொண்டு வருகிறார். எட்டயபுரத்தில் கம்பீரமான பாரதி



மண்டபம் கட்டப்பட்டு வருகிறது. அதற்கு முன்னால் புதுச்சேரியில் பாரதி ஞாபகார்த்தம் அமைப்பதற்கு ஒரு நல்ல கட்டிடத்தை விலைக்கு வாங்கி விட்டார்கள். வருகிற செப்டம்பர் 11ல் பாரதி விழாவன்று திறப்பு விழா நடத்தவும் தீர்மானித்திருக்கிறார்கள். மேற்படிக் கட்டிடத்துக்கு இன்னும் ரூ. 2,400 பாக்கி கொடுக்கவேண்டியிருக்கிறது என்று புதுச்சேரி பாரதி ஞாபகக் கமிட்டி காரியதரிசி தெரியப்படுத்துகிறார். தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் உள்ள பாரதி அன்பர்கள் மேற் குறிப்பிட்ட சொற்ப தொகையைக் கூடிய சீக்கிரத்தில் கொடுத்து உதவி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம். மேற்படி திருப்பணிக்குப் பணம் அனுப்ப விரும்பும் அன்பர்கள் பின்வரும் விலாசத்துக்கு அனுப்பிவைக்க வேண்டும்:—பொக்கிஷதார், பாரதி ஞாபகார்த்தக் கமிட்டி, 51, அம்பலத்தாடியார் தெரு, புதுச்சேரி.

# கந்தசாமிக்கு ஜே!

"விருஷகன்"

அன்று வெள்ளிக்கிழமை. காலை மணி பத்து அடித்து ஐந்து நிமிஷமும் ஆகிவிட்டது. 'ஜோதி வைரத் தொழிற்சாலை' சொந்தக்காரரான தியாகராஜச் செட்டியாரின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. சுபாவத்தில் நல்லவர் என்று பெயர் வாங்கியிருந்த அவர், அன்றைய தினம் பிரளய காலத்து ருத்ரன் போலச் சீறியதற்குக் காரணம் உண்டு. 'ஜோதி வைரத் தொழிற்சாலை'யின் தொழிலாளிகள் அன்று வேலைநிறுத்தம் செய்திருந்தனர். அதுவும் மகாலக்ஷ்மி வாசத்திற்குரிய வெள்ளிக்கிழமையன்றா அவர்கள் வேலை நிறுத்தம் செய்ய வேண்டும்?

செட்டியார் மேலும் கீழும் அலைந்து கடைசியில் களைத்துப்போய் நாற்காலியை வராந்தாவில் போட்டுக் கொண்டு உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்து விட்டார்.

அடுத்த இரண்டு நிமிஷ நேரத்திற்கெல்லாம் 'அஸிஸ்டெண்ட் போர்மேன்' கந்தசாமி 'திருதிரு' வென்று விழித்துக் கொண்டு தொழிற் கூடத்திற்குள் நுழைந்தார். நுழைந்தவர் நேராகத் தன் இடத்திற்குச் சென்று சாணையில் ஒரு வைரத்தை வைத்துத் தீட்ட ஆரம்பித்து விட்டார். 'சரசர' என்ற சத்தம் கேட்டு வராந்தாவில் உட்கார்ந்திருந்த செட்டியார் உள்ளே சென்று பார்த்தார். கந்தசாமி வேலையில் ஈடுபட்டிருப்பதைக் கண்டு மலைத்து விட்டார்! அவர் முகத்தில் லேசாக ஒரு புன்னகை தவழ்ந்தது. கந்தசாமியை நன்றி தோய்ந்த கண்களால் பார்த்து விட்டுச் சென்றார். கடைக் கண்ணால் கவனித்துக் கொண்டிருந்த கந்தசாமிக்கு உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை குளிர்ந்தது. மற்ற வேலைக்காரர்களுக்குக் 'கடுக்காய்' கொடுத்துவிட்டுத் தான் மட்டும் வேலைக்கு வந்ததே செட்டியாரின் தனிச் சலுகையைப் பெறத்தானே! அதை அடையப் போகிறோம் என்று ஏற்பட்டவுடன் அவர் மனம் சந்தோஷத்தை யடைந்தது. சாணையை வேகமாகச் சுழல விட்டார்.

"கந்தசாமி! இன்றைய தினத்திலிருந்து நீர்தான் நமது தொழிற் கூடத்தின் தலைமைப் போர்மேன்!" என்று செட்டியார் மறுதினம் சொல்லும் போது, தனக்கு ஏற்படப்போகும் அதிர்ச்சியைச் சமாளிக்கக் கூடிய அளவுக்குத் தம்மைத் தயார் செய்து கொண்டார் கந்தசாமி. மணி ஒன்று அடித்ததும் இடைவேளை போஜனத்திற்குச் செல்லும் அவர், அன்று ஒன்றரை மணிக்குத்தான் சாப்பிடச் சென்றார்.

மத்தியானம் மூன்று மணிக்கு மறுபடியும் அவர் வேலைக்குத் திரும்பி வந்தபோது 'ஜோதி வைரத் தொழிற்சாலை' ஹாலில் ஒரு சிறு கூட்டத்தின் நடுவே செட்டியாரும் தொழிற் சங்கக் காரியதரிசி கண்ணபிரானும் ஒரு ஒப்பந்தப் பத்திரம் தயார் செய்து கொண்டிருப்பதைக் கண்டார். காரியதரிசி கண்ணபிரானின் முகத்தில் விழிப்பதற்குக் கூச்சப் பட்டுக் கொண்டு, பயபக்தியுடன் செட்டியாரின் பக்கத்தில் ஒண்டிக் கொண்டு நின்றார். அப்போது தான் செட்டியார் காரியதரிசியுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தைப் படித்தார். "இன்று முதல் தொழிலாளிகளுக்கு இருபது சத விகிதம் சம்பள உயர்வு செய்திருக்கிறேன்.........'பழைய சம்பளமே போதும்' எனக் கருதி விசுவாசத்துடன் வேலைக்கு வந்திருந்த 'அஸிஸ்டெண்ட் போர்மேன்' கந்தசாமிக்கு என் மனமார்ந்த நன்றி! அவர் மட்டும் பழைய சம்பளத்துடனேயே வேலையைச் செய்து வருவார்......"

"கந்தசாமி அவர்களுக்கு ஜே!" என்று கோஷம் செய்தனர் சில குறும்புக்காரர்கள்! மூர்ச்சை போட்டுக் கீழே சாய்ந்து கொண்டிருந்த கந்தசாமியின் காதில் அந்த கோஷம் எங்கே விழுந்திருக்கப் போகிறது!

## ஒட்டுக் குடி!



ஜோசியர் :—என்னய்யா! இந்த ஜாதகத்தில் சனியும் கேதுவும் ஒரே வீட்டில் இருக்கிறார்களே?

மற்றவர் (ஞாபகமறதியாக):—ஆமாம்; இப்போது வீடு கிடைப்பதுதான் குதிரைக் கொம்பாயிருக்கிறதே? அதனால்தான் ஒரே வீட்டில் இரண்டு பேரும் குடி இருக்கிறார்கள்! —ஜி. ராமானுஜம்.

★ யாருக்காவது வீடு வேண்டுமா? யாருக்காவது தங்களுடைய பையன்களைக் காலேஜில் சேர்க்க வேண்டுமா? அப்படியானால் போங்கள் உடனே ராமண்ணாவிடம்!........

# வீடு வேண்டுமா?

சாவி

சென்ற வாரம் ராமண்ணாவைப் பார்க்கப் போயிருந்தேன். என்னைப் பார்த்ததும் ராமண்ணா சிரித்துவிட்டுத் தன்னுடைய பிரதாபங்களை ஒரே யடியாக அளக்க ஆரம்பித்து விட்டான். சொந்தக் காரியம் ஒன்றை உத்தேசித்து அவன் சொல்லிக் கொண்டு வந்தவைகளைப் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்தேன். அவன் சொன்னதாவது :—

இப்போதெல்லாம் என்னைப் பார்க்க வருகிறவர்கள் சும்மா வருவதில்லை. பழம், பிஸ்கத்து, வெள்ளிப் பாலடை, கிலுகிலுப்பை, பிரம்புத் தொட்டில் இம்மாதிரி ஏதாவது வாங்கிக்கொண்டு வருகிறார்கள். எனக்குக் குழந்தை பிறந்திருக்கும் சேதி என் நண்பர்களுக்கெல்லாம் இவ்வளவு சீக்கிரத்தில் எப்படித் தெரிந்தது என்பதே மகா மர்மமாயிருக்கிறது. பொழுது விடிந்து பொழுது போனால் எனக்குத் தெரிந்தவர்கள் தெரியாதவர்கள், நண்பர்கள், பந்துக்கள் எல்லாரும் என் வீட்டைத் தேடி வருவதும், பரிசுகள் வழங்குவதுமாகவே அமர்க்களப் பட்டுக் கொண்டிருக்கிறது.

திடீரென்று இப்படி என் மீதும் என் குழந்தையின் மீதும் இவர்களுக்கெல்லாம் அன்பும் அபிமானமும் ஏற்பட்டதற்கு என்ன காரணம் என்றே புரியவில்லை.

பத்து தினங்களுக்கு முன்னால் ஒரு நண்பர் வந்தார். வந்தவர் சும்மா வந்தாரா? "என்ன ராமண்ணா! உமக்குக் குழந்தை பிறந்திருக்கிறதாமே?" என்று கேட்டுக் கொண்டே வந்தார். பிறகு குழந்தையைப் பார்த்து அதன் கையில் தான் கொண்டு வந்திருந்த வெள்ளிக் கோப்பையைக் கொடுத்து விட்டுப் போனார். அதற்கடுத்த நாள் இன்னொருவர் வந்தார். அவர் தங்க முலாம் பூசிய வெள்ளிப் பாலடை ஒன்றைக் கொண்டு வந்திருந்தார். குழந்தையின் சாமுத்ரிகா லட்சணங்களைப் பார்த்து வானளாவ வர்ணித்தார். "பெண்ணுக்கு அப்படியே உங்கள் மூக்குதான், ஸார்!" என்றார்.

நான் மௌனமாகப் புன்சிரிப்புடன் அவருடைய வர்ணனையை ரஸித்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரத்துக்கெல்லாம் பாலடையைக் குழந்தையிடம் கொடுத்து விட்டு விடை பெற்றுக் கொண்டார். அவர் போன சற்று நேரத்துக்கெல்லாம் என் மனைவிக்குத் தெரிந்த ஒரு சிநேகிதி அம்மாள் வந்தாள். அந்த அம்மாள் குழந்தையை மடியில் எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்சி விட்டு வெள்ளிக் கிலுகிலுப்பை ஒன்றைப் பரிசாகக் கொடுத்துவிட்டுப் போனாள். அந்த அம்மாள் போன சிறிது நேரத்துக்கெல்லாம் இன்னொருவர் வந்தார். அவர் பின்னோடு ஒரு கூலி ஆளும் வந்தான். வந்தவன் தலையில் ஒரு பெரிய பிரம்புத் தொட்டிலும் அதற்குள்ளே சாத்துக்கொடிப் பழங்கள், வாழைப் பழங்கள், சர்க்கரை இன்னும் என்ன வெல்லாமோ இருந்தன. அந்த ஆசாமி, "ஸார், குழந்தைக்குக் கண் ரொம்பத் தெளிவாக இருக்கிறது, ஸார்!" என்றார். தூங்கிக் கொண்டிருந்த குழந்தையின் கண் தெளிவை அவர் எப்படிக் கண்டு பிடித்தார் என்று தெரியவில்லை!

இப்படிப் பல பேர் வந்திருந்தார்கள். முன்பின் அறிமுக மாகாதவர்கள் கூட வந்திருந்தார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகக் குழந்தையைப் புகழ்ந்து கூறி விட்டுப் போனார்கள்.

வேறொரு நண்பர் குழந்தையின் அழுகுரலைக் கேட்டு விட்டு "இந்தக் குழந்தையின் குரலில் சங்கீத அம்சம் பரிபூரணமாக அமைந்திருக்கிறது" என்று ஒரு அபூர்வ உண்மையைக் கண்டு பிடித்துக் கூறினார். என் மனைவியின் சிநேகிதிகள் எல்லாரும் குழந்தை என் மனைவியின் ஜாடையாயிருப்பதாகவும், என்னுடைய சிநேகிதர்களெல்லாரும் குழந்தை என் ஜாடைதான் என்றும் கூறினார்கள்.

என்னைப் பார்க்க வரும் இந்த சிநேகிதர்கள் மோச வலையில் நான் விழுந்துவிட மாட்டேன்; இவர்களுடைய வஞ்சகப் பேச்சில் நான் மயங்கிவிட மாட்டேன். இவர்கள் வர்ணிக்கும் பொய்களைக் கேட்டு நான் உள்ளம் குளிர்ந்து போக மாட்டேன். இவர்கள் கொண்டு வரும் வெள்ளிப் பாத்திரங்களும் பட்டுத் துணிகளும் என்னத்திற்காக என்று எனக்கு நன்றாகத் தெரியும். தெரிந்திருந்தும் வரும்படியை உத்தேசித்து ஒன்றுமே தெரியாதவன் போல் பாசாங்கு செய்து கொண்டிருக்கிறேன். திடீரென்று இவர்களுக்கு என்பேரில் ஏன் இத்தனை அபிமானம் என்பதை இவர்கள் சொல்லியா எனக்குத் தெரிய வேண்டும்! இவர்களெல்லோரும் சுயகாரியப் புலிகள் என்பதும் இவர்கள் ஒவ்வொருவருக்கும் என்னால் ஒவ்வொரு விதமான காரியம் ஆகவேண்டும் என்பதும் எனக்கு வெகு நன்றாகத் தெரியுமே!

மிஸ்டர் சேஷாசலத்துக்குத் தெரிந்த ஒரு நண்பருடைய சிநேகிதருக்குச் சொந்தக்காரருடைய பிள்ளை ஒருவர் இருக்கிறார். அவருக்கு எங்கள் ஆபிஸில் ஒரு உத்தியோகம் தேவையாயிருக்கிறது. அதனால் அவர் சேஷாசலத்தைப் பிடித்து என்னிடம் தூது அனுப்பியிருக்கிறார். சேஷாசலம் வெறுங் கையுடன் என்னைப் பார்க்க வந்தால் காரியம் ஆகாது என்று நினைத்து என்னைத் திருப்தி செய்வதற்காகக் குழந்தைக்குப் பரிசு வாங்கி வந்திருக்கிறார்.

இன்னொரு நண்பருக்குக் குடியிருக்க ஒரு வீடு தேவை. என்னுடைய வீட்டை நான் காலி செய்யப் போகிறேன் என்கிற விஷயம் எப்படியோ அவருக்கு மூக்கில் வியர்த்துவிட்டது. உடனே ஓடி வருகிறார் பரிசும் கையுமாக. பரிசைக் கொடுப்பது போல் கொடுத்துவிட்டு, அப்படியே வீட்டு விஷயமாகப் பிரஸ்தாபம் செய்கிறார். இவர் சுயகாரியப் புலியா, இல்லையா?

என்னுடைய மைத்துனர் ஒரு 'ஷாப்' வைத்திருக்கிறார். அதில் ஹார்லிக்ஸ், ஓவல்டின் எல்லாம் 'கண்ட்ரோல்' விலைக்குக் கிடைக்கும் என்று என் நண்பர்களுக்கு யாரோ சொல்லியிருக்கிறார்கள். அவ்வளவுதான்; ராமண்ணாவைப் பிடித்தால் மேற்படி சாமான்களைச் சுலபமாய் வாங்கலாம் என்று நினைத்தே குழந்தையைப் பார்க்க வருகிறமாதிரி வந்திருக்கிறார்கள்.

இன்னொரு நண்பருடைய மருமான் ஒருவன் காலேஜில் சேரவேண்டியிருக்கிறது. சென்னையில் புதிதாக ஆரம்பிக்கப் போகும் ஒரு காலேஜின் நிர்வாகஸ்தர்களில் ஒருவரை எனக்குத் தெரியும். இது விஷயம் நண்பருக்கும் தெரியும். எனவே சுயகாரியார்த்தம் என் குழந்தைக்குப் பரிசு கொடுத்திருக்கிறார்.

இப்படியாகப் பல பேர் தினசரி என்னைத் தேடி வந்து கொண்டிருக்கிறார்கள், பரிசு கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள், பரிசைக் கொடுத்து விட்டு அப்படியே போகும்போது தங்கள் காரியமாக ஒரு வார்த்தை சொல்லி வைக்கிறார்கள். நானும் என்னால் முடிந்ததையெல்லாம் அவர்களுக்குச் செய்து கொண்டிருக்கிறேன். எனக்கு லாபமான காரியங்களை அவர்கள் செய்து கொண்டிருக்கும்போது அவர்களுக்கு வேண்டிய உதவியை நானும் செய்ய வேண்டியதுதானே?

* * *

"அப்படியா?" என்று கேட்டேன்.

"ஆமாம்; அப்படித்தான்" என்றான் ராமண்ணா. மெதுவாக என் சட்டைப் பையில் வைத்திருந்த ஒரு வெள்ளிப் பாலாடையை எடுத்து ராமண்ணாவின் முன்பு வைத்தேன். ராமண்ணா புன்சிரிப்போடு அதைப் பெற்றுக் கொண்டான். எனக்கு ஒரு வீடு தேவை என்கிற விஷயத்தை ராமண்ணாவுக்கு நான் சொல்லியா தெரிய வேண்டும்?



## தமிழ் முரசு

[பதிப்பாசிரியர்: ம. பொ. சிவஞான கிராமணியார்: 233, லிங்கி செட்டித் தெரு, சென்னை—1. விலை அணா 4.]

ஸ்ரீ சிவஞான கிராமணியாரின் இரண்டாவது புத்தகம், "முரசு கொட்டித் தமிழ் முழங்கி"க் கொண்டு வெளி வந்திருக்கிறது.

நாமக்கல் கவிஞரின் தமிழர் முன்னணிப் பாடலுடன், ஸ்ரீ ரா. பி. சேதுப் பிள்ளையின் வீரத் தமிழ்க் கட்டுரை, ஸ்ரீ பெ. குருசாமியின் தமிழர் வீரக் கட்டுரை, ஸ்ரீ தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரின் தமிழர் ஆசைக் கட்டுரை, இளவழகனாரின் புதிய தமிழகக் கட்டுரை, ஸ்ரீ மு. அருணாசலத்தின் புதுமைத் தமிழ்க் கட்டுரை ஆகியவை இந்த இரண்டாவது புத்தகத்தில் தமிழ் மணம் வீசித் தமிழ் ஒளி செய்கின்றன. ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார் பிரிட்டிஷ் மந்திரிகளின் புதிய அரசியல் திட்டத்தைத் தமிழ் இனக் கண்கொண்டு அலசிப் பார்த்து, தமிழர் சுய நிர்ணயத்துக்கு ஒத்தவாறு அதைத் திருத்தி அமைக்க யோசனைகள் சொல்லிவிட்டு "தமிழ் அரசு வேண்டும்" என்று முரசு கொட்டி முடிக்கிறார்.

தமிழ் முரசு முதற் புத்தகத்துக்கு அநேகர் எழுதிக் கேட்டு ஏமாற்றமடைந்தார்கள். அம்மாதிரி ஏமாற்றத்துக்கு இடமின்றி இரண்டாவது புத்தகத்துக்கு உடனே முந்திக் கொள்ளுங்கள். விலை அணா 4 தான்.

நல்ல

'ஆஸ்'

வேண்டிய அளவு




# 'ஆஸ்ப்ரோ'

## கட்டுப்பாடு செய்யப்பட்ட வில்லைகள்

**3 வில்லைகள் கொண்ட பாக்கட் 1க்கு அணா 1.**

**30 வில்லைகள் கொண்ட டப்பி 1க்கு அணா 10.**

விநியோகிப்பவர்கள்

**ஜே. எல். மார்ஸன் ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்.**

9/10, ஸெகண்ட் லேன் பீச், மதராஸ்

தபால் பெட்டி நெ. 1370 டெலிபோன் நெ. 4460

# செய்தி!

## ப்ரோ'
### வந்து விட்டது

போலிகளை வாங்காதீர்கள். ஒவ்வொரு வில்லை மீதும் 'ஆஸ்ப்ரோ' என்ற வார்த்தை இருக்கிறதா என்று பாருங்கள்.

*வலிகளையும் ஜுரத்தையும் 'ஆஸ்ப்ரோ' பத்து நிமிஷங்களில் நிறுத்துகிறது. இருதயத்துக்கோ குடலுக்கோ கெடுதி செய்யாது*



'ஆஸ்ப்ரோ' எங்கும் கிடைக்கும்.




# P. A. ராஜ செட்டியார் & பிரதர்

## கடைத்தெரு, கோயமுத்தூர்.

தந்தி.."ராஜா"... தபால் பெட்டி, 139. போன், 218.A.

---

# ப்ளோரியின் வியாபகம்

அழகளிக்கும் பொருள்கள்

- ★ அழிவற்ற ப்ளோரி லிப்ஸ்டிக்
- ★ ப்ளோரி வாஸனை திரவியம்
- ★ ப்ளோரி பேஸ் பவுடர்
- ★ ப்ளோரி பிரில்லியண்டைன்
- ★ ப்ளோரி கோல்ட் க்ரீம்
- ★ ப்ளோரி ஸ்னோ




விநியோகஸ்தர்கள்:
விஜயா
டிரேடிங்
ஏஜென்ஸி
2/500, தங்க
சாலைத் தெரு,
பார்க் டவுன்,
மதராஸ்

Issued by FLORY LTD., P.O. Box 875, Bombay 1

சென்னைக்குப் பிரதம ஸ்டாகிஸ்டுகள்: எம். கே. ஏ. & கம்பெனி!
2/500, தங்கசாலைத் தெரு, பார்க் டவுன், மதராஸ்

## சிற்ப வேலைப்பாடுள்ள ஜன்னல் போல் நேர்த்தியானது






**கட்டாவ் மக்கன்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கம்பெனி லி.**

மில்கள்: பைகுல்லா, பம்பாய்.

ஆபீஸ்: லைஜி பில்டிங், பல்லார்ட்பியர், போர்ட், பம்பாய்.

ப. க.







BISMAG








ASSORTED
VEGETABLE PICKLES
(UNTOUCHED BY HAND)
PREPARED BY
T.S.R. & Co.,
PERFUMERS, KUMBAKONAM

Regd. No. M. 4392

